உ

கடவுள் துணை.

வித்வசிரோன்மணியாகிய

புகழேந்திப்புலவர்

திருவாய்மலர்ந்தருளிய

# பவளக்கொடிமாலை.

இஃது

குயப்பேட்டை,

வீ. இராஜு முதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு

மதுரை புதுமண்டபம் புத்தகஷாப்

பி. நா. சி. கடைகாரியம்.

மு. கிருஷ்ணப்பிள்ளை அவர்களால்

சென்னை:

பி. நா. சிதம்பரமுதலியார்.

பிரதர்ஸ் அவர்களது

சென்னை

வித்தியாரத்நாகா அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1924.

இதன்விலை அணா—6.

# அயக்காந்த திராவகம்.



அநுபவமானது! பிரசித்தியடைந்தது! சஞ்சீவிபோன்றது.

இரும்பைப்பார்க்கிலும் கடினமான லோகம் வேறொன்றுமில்லை. தாதுவிர்த்திக்கு இதுசிறந்தது. பொன், வெள்ளி முதலியவைகள் அந்தச்சமயமட்டும் அதிககுணத்தைக்கொடுத்து சீக்கிரத்தில் தேகத்தை கெடுத்துவிடும். இதனால் (இருப்பவன் இரும்பைத்தின்றால் போரவன் பொன்னைத்தின்பான்) என்பதுபோல இத்திராவகத்தை சாப்பிடுவதற்குமுன் தன்தேகம் எவ்வளவுநிறையுள்ளதென்று நிறுத்துக்கொண்டு,ஷ்டி திராவகத்தை ஒருமண்டலம் 48-நாள் சாப்பிட்டு மறுபடியும் திராசில் நிறுத்துப்பார்த்தால் முன்னிருந்ததைவிட ஒருவீசை 40 பலம் அதிகநிறையிருப்பது அநுபவத்தில் விளங்கும்.

தாதுவிர்த்தியில்லாதவர், இரும்பைப் பழுக்கக்காய்ச்சி அதை ஜலத்திலணைத்து தினந்தோறும் குடித்துவந்தால் தாதுவிர்த்தியுண்டாகுமென்று வைத்திய சாஸ்திரம் கூறுகின்றன. இதற்கே இக்குணம் இருக்கும்போது அயத்தினுடையவும், காந்தத்தினுடையவும் சத்தைத் திராவகமாக இறக்கியிருக்கும் இதை உட்கொண்டவர்கள் தேகம் வச்சிரசரீரமாகுமென்பதற்கு தடையில்லை.

## இதனை உண்பதனால் உண்டாகும் லேக்கியகுணங்கள்

(1) நரைத்தமயிரைக் கறுப்பாக்கும் (2) புழுவெட்டினாலும், அதிக உஷ்ணத்தினாலும் உதிர்ந்தமயிரை முளைப்பிக்கும் (3) கண் கைகால் எரிச்சலைப்போக்கும் (4) முகவசீகரமுண்டாகும் (5) தேகத்திலுள்ள உஷ்ணத்தை அகற்றி வாயுவைக் கண்டிக்கும் (6) கை கால் இடுப்பசதிகளையும்போக்கி நல்லபலத்தைக்கொடுக்கும் (7) பித்தவாயுவை அடியோடு தொலைத்துவிடும் (8) பசியையும் ஜீரணசக்தியையுமுண்டாக்கும் (9) தளர்ந்துபோனநரம்புகளை வலுப்படுத்துவதில்நிகரற்றது (10) நகக்கண்களிலும், விழிகளிலும் ரத்தமில்லாமல் வெளுத்துப்போனவர்கள் இதை ஒருமண்டலம் உட்கொண்டால் ஆச்சரியப்படும்படி தேகமுழுதும் புதிய ரத்தம்பரவும் (11) காமாலை, சோகை, குன்மம், கைகால் வீக்கம், குடல்வாதம் இதுகளை 8-நாளையில் போக்கி நல்லஸ்திதியில் கொண்டுவந்துவிடும்.

## திராவகம் உட்கொள்ளவேண்டிய முறை.

அரிக்கால் ஆழாக்கு சுத்தஜலத்தில் திராவகத்தை 5 துளி அல்லது 7 துளிவிட்டுக் கலக்கிக் குடித்துவிடவேண்டும் பத்தியமில்லை மற்றவிபரங்கள் மருந்துடன் அனுப்பப்படும்.

| | |
|---|---|
| அரைமண்டலம் 24-நாள்மருந்து ரூ. 1-4-0 | டஜன் 1-க்கு ரூ. 12 |
| ஒருமண்டலம் 48-நாள்மருந்து ரூ. 2-0-0 | டஜன்1-க்கு ரூ. 21. |

என்னுடைய கேட்லாக்வேண்டுமானால் அரையணா ஸ்டாம்பு அனுப்பினால் அனுப்பப்படும். கடிதம் எழுதும்போதெல்லாம் விலாசத்தை விபரமாய் எழுதவும்.

பி. நா. சிதம்பரமுதலியார் பிரதர்ஸ்,
பிரம்பூர் பாரெக்ஸ், போஸ்டு, மதராஸ்.

உ

கடவுள் துணை

# பவளக்கொடிமாலை.

காப்பு-கலிவிருத்தம்.

வேதமாநெறி சேரும்வினைகளும்
தாகபோக விடாததளர்ச்சியும்
சோகவாரி னால்வருந்துன்பமும்
போகவானை முகவனைப்போற்றுவாம்.

விநாயகர் தோத்திரம்.

அத்திமுகத்தோனே அரனார்திருமகனே
சத்திமுககணபதியே சரிந்தவயிற்றோனே
காரணைமாமுகனே கணபதியேமுன்னடவாய்
ஸ்ரீராமர்தன்மருகா செலவக்கணபதியே
பேழைவயிற்றோனே பெருச்சாளிவாகனனே
கந்தருக்குமுன்பிறந்த கற்பகமேமெய்ப்பொருளே
வந்தெனக்குமுன்னடவாய் மாயன்மருகோனே

கலைமகள் துதி.

வாணிசரஸ்வதியே மறையவனார்தேவியரே
சொல்லுவழுவாமல் சொற்குற்றம்வாராமல்
நாவுதவறாமல் நடத்துமம்மாவிக்கதையை
ஐந்தெழுத்தையோரெழுத்தாய் அழுத்துமம்மாயென்னாவில்
எட்டெழுத்தையோரெழுத்தாய் எழுதுமம்மாயென்னாவில்

துரோபதை துதி.

தோளுவடிவழகி துரோபதைபாஞ்சாலி
அக்கினியில்வந்துதித்த ஆதிபராசத்தியே
நெருப்பில்பிறந்தவளே நீலவர்ணன்தங்கையரே
மந்தாரக்குக்கியற்கு முந்திவந்தமருமகளே
சந்தனவடிவழகன் தருமராசன்தேவியரே
பாடத்தொடங்கினேன் பாஞ்சாலன்சீர்மகளே
உன்கதையைநான்பாட ஊழ்வினைகள்வாராமல்
பவளக்கொடிமாலை பாடத்தொடங்கினேன்யான்
கற்றோர்க்குற்றங்கள் காதுவழிநேர்ந்தாலும்
உற்றபிழைகளெல்லாம் உயர்ந்தோர்மனம்பொறுத்து

அப்புவியோரெல்லோரும் ஒப்பிமனமகிழ
அப்பால்நடந்தகதை அடியேனுரைத்திடுவேன்

## அல்லி அரசிருக்கை.

அல்லிப்பெருமாள் அரசாளும்நாயகியாள்
ஆராயிரம்பாண்டியற்கு அரியதுரைமகளாம்
மதுரைநகராளும் வாழ்பாண்டிநாடுடையாள்
நாலுமலையாளம நடுவானதென்மதுரை
தென்மதுரையாளுகிற தேன்மொழியாளல்லியம்மாள்
ஆணரசாண்டாலே அழிந்துபோமசீமையென்று
பெண்ணரசாளவென்று பிறந்தாளே அல்லியிலே
ஒருவர்-வயிற்றிற்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்லை
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
ஓடுகிறதண்ணீரில் உள்ளேமணற்சேருமுண்டு
அடிக்கிறகாற்றதனில் அலைகாற்றுரும்புமுண்டு
கலாகாலநாதருக்கு கண்டங்கறுப்புமுண்டு
சந்திரற்குமச்சமுண்டு சற்றேகருப்புமுண்டு
குன்றுமணிக்காலும் கொஞ்சங்கறுப்புமுண்டு
புருவங்கறுப்பொழிய பின்னேகறுப்புமில்லை
மன்னன்விசையன் மடலூர்ந்தமாதேவி
காளைவிசையன் கட்டழகிமாதேவி
ஏழுபிராயத்திலே எதிர்த்துவந்தநீண்முகனை
வெட்டிக்கெலித்து வீரபட்டங்கட்டிக்கொண்டாள்
பொம்மைவிருதுகட்டி பூமியெல்லாமாளுகிறாள்
அல்லியென்றுபேர்சொன்னால் அழுகபிள்ளைவாய்மூடும்
கொம்பனையாள்பேர்சொன்னால் குருவிதண்ணீர்குடியாது
கட்டழகிபேர்சொன்னால் கல்லுதெய்தங்கூத்தாடும்
அல்லியென்றுபேர்சொன்னால் அறுத்ததலைகொக்கரிக்கும்
கட்டழகியல்லியரும் காலையில்தானெழுந்து
முத்துச்சிவிகையது யேறிமுருகுழலாள்
தாதியருந்தோழியரும் தையல்மார்சூழ்ந்துவர
பூங்காவனச்சோலை போயிறங்கியல்லியரும்
பாலைகொண்டுபல்விளக்கி ஓலைகொண்டுநாவழித்து
பொய்கையில்போயிறங்கி பொன்முகஞ்சுத்திபண்ணி
முத்துநிகர்த்தபல்லும் முருக்கம்பூசெவ்வாயும்
காலோடுங்கைகளும் கனிவாயுஞ்சுத்திபண்ணி
சிவசிவாவென்றுசொல்லி திருநீற்றுக்காப்பணிந்து
மதுரைமீனாட்சியவை மனதிலேதானினைந்து
சொக்கரடிபணிந்து செவிமீதிற்பூச்சொருகி
சந்தனமும்பன்னீரும் சவ்வாதுந்தானணிந்து



அல்லி அரசிருக்கை.

பார்ப்பார்பரதேசி பண்டாரஞ்சங்கமற்கு
அந்தணர்வேதியற்கும் அதிதிபரதேசியற்கும்
தானம்வழங்கிவர தாமரைசூழ்வாழ்மாரி
தருமத்தைசெய்தவளும் தண்டிகையின்மீதேறி
பூங்காவனத்தைவிட்டு பொற்கொடியும்வாறாளே
ஆனையின்மேல்பேரிகை அடிபடுதுகுமுகுமென்று
ஒட்டையின்மேல்பேரிகை ஓசைகிளம்புகுது
பேய்த்தாரையூதிவர பெரியடமாடோலடிக்க
சங்கீதமேளம் சபையில்முழங்கிவர
ஐங்காதவழிதூரம் பேய்த்தாரையூதிவர
நாற்காதவழிதூரம் நாகசுரமூதிவர
முக்காதவழிதூரம் முரசுமுழங்கிவர
தித்திமித்தோமென்று சிறுபெண்களாடிவர
தத்திமித்தோமென்று தாளங்கள்போட்டுவர
கவியர்கவிபாட கட்டியங்களாற்பரிக்க
புலவர்புகழ்ந்துவர புட்பங்கள்தூவிவர
நட்டுவர்பாடிவர ரவையர்களாடிவர
ஆடாதகூத்துகளும் அரிச்சந்திரநாடகமும்
கேளிக்கைபார்த்துமல்லோ கிளிமொழியாள்வாராளே
தெத்துக்கடந்து தெருவீதிதான்கடந்து
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டு
அங்காடிவீதிகளும் அரண்மனையுந்தான்கடந்து
மாடத்தெருகடந்து மண்டபமருகில்வந்து
பல்லக்கைவிட்டிறங்கி பார்மனையினுட்புகுந்து
முத்துமிதியடியைத் தொட்டுமிகநடக்க
மாணிக்கக்கிரீடங்கள் மகுடமுடிதுலங்க
தாதியர்கள்சூழ்ந்து தனிக்கவரிவீசிவர
மாதர்புடைசூழ மண்டபஞ்சென்றேறினாள்
ஓராம்படித்தளமாம் ஓலைப்பூமண்டபமாம்
இரண்டாம்படித்தளமாமிரத்தினகிரிமேடைகளாம்
மூன்றாப்படித்தளமாம் முத்துச்செம்பொன்படிவாசல்
நான்காம்படித்தளமாம் நாகரத்னமண்டபமாம்
ஐந்தாம்படித்தளமாம் அரக்குமணிமேடைகளாம்
ஆறாம்படித்தளமாம் அழகானமேடைகளாம்
ஏழாம்படித்தளமாம் எழிலானமண்டபமாம்
எட்டாம்படித்தளமாம் எண்ணெய்க்கால்மண்டபமாம்
ஒன்பதாம்படித்தளமாம் ஓலைப்பூமண்டபமாம்
பத்தாம்படித்தளமாம் பளிங்குமாமண்டபமாம்
ஆயிரங்கால்மண்டபத்தில் அல்லியரும்வந்தமர்ந்தாள்
பொன்னுமலைநாடாளும் போகவதிவந்தமர்ந்தாள்
பன்னிரண்டுமெந்திரியும் படைத்தலைவர்வந்தமர்ந்தார்

மந்திரிபிரதானிகளும் மற்றுமுள்ளராசாக்கள்
முந்நூறுகோடி முடிமன்னர்வந்தமர்ந்தார்
நானூறுகோடி நகரத்தார்வந்தமர்ந்தார்
முடியோடுமுடிநெருங்கும் முருகுழலாளம்பலத்தில்
சட்டையொடுசட்டை நெருங்குஞ்சபைதனிலே
அமரதரும் சமரதரும் ஆஸ்தானமகரதரும்
கலிங்கதெலுங்கர்களும் கன்னடியர்மராட்டியரும்
நிறைந்தகொலுவாயிருக்கும் நேரிழையாளம்பலத்தில்
அப்பெரியசபைதனிலே அல்லியவள்கொலுவிருக்க
காணவருவாரும் கைகட்டிநிற்பாரும்
பார்க்கவருவாரும் பாண்டியப்பெருமானை
தூரத்துராசாக்கள் சுருளோலைகொண்டுவந்தார்
காதத்துராசாக்கள் கைவோலைகொண்டுவந்தார்
செம்பொன்னும்பூட்டிவருந் தீவுகிளிப்பிள்ளைவரும்
இந்தவிதமாக யிருக்கின்றவேளையிலே

புலந்திரன் விளையாடல்.

அந்தச்சமயத்தில் அழகுபுலந்திரனும்
செண்டுமறவானுஞ் சினேகிதரைப்பிரியானும்
கோட்டைமறவானும் கூட்டாளிதரியானும்
தாயாரைச்சுற்றிவந்து தயிருக்கழுவானும்
பாதத்தைச்சுற்றிவந்து பாலுக்கழுவானும்
விளையாடிவீட்டில்வந்து வெண்ணைக்கழுவானும்
வாயைமுகந்தாக்கால் முலைப்பால்கவுச்சடிக்கும்
வீதிவிலாசமதாய் விளையாடும்வேந்தனவன்
தங்கத்தேரோட்டி தனஞ்செயனார்வீதியெல்லாம்
செம்பொன்தேரோட்டி திகழ்வேந்தர்வீதியெல்லாம்
மாணிக்கத்தேரோட்டியே மன்னர்தெருவீதியெல்லாம்
முத்துத்தேரோட்டியே முடிமன்னர்வீதியெல்லாம்
வசந்தமணிமண்டபத்தில் வழியேவரும்போது
பஞ்சவர்னக்கிளிகளைக் கண்டந்தபாண்டியனும்
இப்படிக்கொத்ததேர் இபற்றவென்றுபுலந்திரனும்
தாயார்கொலுவிற்கு வந்தான்புலந்திரனும்
தண்டையசைய சதங்கைகலகலென
அரைவடமுங்கிண்கிணியு மறையில்நிழல்காட்ட
கண்டசரமும் கனவயிரத்தாழ்வடமும்
மார்பில்பதக்கமின்ன வச்சிரக்கபாய்கள்மின்ன
வட்டமிட்டநெற்றியிலே வயிரமுடிதுலங்க
பட்டுதட்டிஒட்டியாணம் பசும்பொன்னுல்சமுதாடு
கட்டிபுரண்டாடக் கட்டழகன்வாறானும்
சிறுகால்மிதியடியாம் சிங்காணிவில்லழகாம்

பக்கமிருபுறமும் பரிசுபிடித்துவர
கட்டழகன்பின்னாக கத்திசுழட்டிவர
ஈட்டிபிடித்தவர்கள் இருபுறமுஞ்சூழ்ந்துவர
தாயார்கொலுச்சபையில் தார்வேந்தன்வந்துநின்றான்
வந்துநின்றதன்மகனைக் கண்டுகந்தவாழ்மாரி
அப்பாவருக அழகானகண்மணியே
பிள்ளைகலிதீர்த்தவனே பெருமானேவாருமென்றாள்
கண்மூன்றுடைய கைலாசநாதனே
அண்டத்துசந்திரனே அருகிருக்கும்பாற்குடமே
சொக்கர்திருமாளிகைக்கு தூண்டாமணிவிளக்கே
வைகைக்கரைதனக்கு மண்சுமந்தசொக்கரே
கப்பலுஞ்சோங்குங் கரைதுறையுமுள்ளவனே
சங்கீன்றமுத்தே சலாபமுடையவனே
ஆயிரம்பாண்டியற்கு அழகானபேரனையோ
வாராய்மகனேயென்று வாரிமடியில்வைத்து
ஏந்திமடியில்வைத்தாள் இருகொங்கைபாலொழுக
சட்டையைநீக்கியே சரீரமெல்லாமுத்தமிட்டாள்
உச்சிமுகந்தானே உள்ளங்கால்முத்தமிட்டு
மைந்தன்புலந்திரனை மடிமேலேவைத்திருந்தாள்
என்னவேணுமென்மகனே எனக்குரியக்கூறுமென்றாள்

புலந்திரன் தாயாரைப் பவளத்தேர் கேட்டது.

எண்ணிப்புலந்திரனும் ஏங்கிவுரைக்கலுற்றான்
தாயார்முகம்பார்த்து தார்வேந்தனேதுரைப்பான்
உலகாதிபாகையினால் உன்மைந்தனானபடி
மதுராபுரிதுரையாள் உன்மைந்தனானபடி
நானேறிவிளையாட வியலானதங்கரதம்
தங்கத்தேர்தந்தாரே தனஞ்செயனாரென்பாட்டன்
மாணிக்கத்தேர்தந்தாரே மன்னர்துரைராசாக்கள்
சித்திரவீதிகளும் சிறப்பானதோப்புகளும்
மட்டில்லாவீதிபது மதுரைப்பெருந்தெருவில்
செம்பொன்தேர்தந்தாரே திகழ்வேந்தரென்பாட்டன்
வாழ்பாண்டிநாடும் மதுரையுஞ்சுற்றிவர
பாண்டியப்பெருமானே பவளத்தேர்வேண்டுமம்மா
போசனங்கள்வேண்டாமென்று பிணங்கினானிந்திரனும்
மைந்தனதுவார்த்தையை கேட்டுகந்தவாழ்மாரி
கேளாக்கருமத்தை கேட்டாயேகண்மணியே
தங்கத்தேர்வேண்டிக் கேளாமல்கண்மணியே
முத்துத்தேர்வேண்டி முடிமன்னாகேளாமல்
மாணிக்கத்தேர் வேண்டி மைந்தரேகேளாமல்
என்னுடைபராச்சியத்தில்! இல்லையேபவளமது

இல்லாக்கருமத்தை கேட்டீர்புலந்திரனே
என்று-உற்றுநினைந்தானே ஒருகோடிபுத்திகளோ
மைந்தனவன்கேட்டது மனதுதுயரமதாய்
அப்பெரியசபைதனிலே அனந்தமானராசர்முன்னே
ஆயிரம்பாண்டியர்கள் ஐபன்மார்சபைதனிலே
வேந்தர்சபைதனிலே மெல்லியருமேதுரைப்பார்
என்னுடையகொலுவிலே யிருக்கின்றராசர்களே
மந்திரிபிரதானிகளே வாய்மொழியைச்சொலுமென்றார்
பாலன்புலந்திரற்குப் பவளத்தேர்வேண்டுமாம்
அறிந்தாலுரையுங்கள் அழகானராசர்களே
இவ்வார்த்தைகேட்டு யேதுரைப்பார்மந்திரிகள்
இங்கேகிடையாது இபராணநற்பவளம்
வடக்கேவெகுதூரம் வன்மைதீவாந்தரத்தில்
தீவாந்தரக்காட்டில் செம்பவளம்விளைகிறது
பன்னிருகாதவழி பவளம்விளைகிறது
அங்கேயிருக்குதம்மா அழகானநற்பவளம்
கொண்டுவருவாருண்டானால் கொப்பெனவேநீரனுப்பும்
என்றதுகேட்டுயேதுரைப்பாள்வாழ்மாரி
என்னுடையசபைதனிலே யிருக்கிறராசர்களே
தீவாந்திரத்துக்குப் போறதுரைகளுண்டோ
போரதுரைகளுண்டோ புரப்படுங்களிச்சபையில்
தாம்பூலம்வாங்குங்கள் சமர்த்துள்ளராசர்களே
பூநூலதரித்தகொரு புண்ணியராசர்களே
கத்திகட்டும்ராசாக்கள் கனத்ததுரைகளுண்டோ
மீசையுள்ளராசாக்கள் வெளிப்பட்டுவாங்களென்றாள்
நாடுதருவேன் ராச்சியம்நான்தருவேன்
பூமிதருவேன் புதுபட்டங்கட்டிவைப்பேன்
என்னைப்போல்ராசாவாய் இனியபட்டங்கட்டிவைப்பேன்
வல்லமையுண்டானால் வாங்குங்கள்தாம்பூலம்
என்றதுகேட்டவுடன் இபராணமந்திரிகள்
பட்டத்துமந்திரிகள் பாவேந்தரேதுரைப்பார்
மதுரைப்படைத்தலைவர் மந்திரிகளேதுரைப்பார்
அல்லிப்பெருமாளே ஆச்சியம்மேநீர்கேளும்
பிறந்தோம்மதுரையிலே வளர்ந்தோம்மதுரையிலே
மதுரைக்கப்பாலே வனமொன்றுநாமறியோம்
அறிந்துபொய்சொன்னாலே ஆக்கினைசெய்திடுவாய்
உன்-ஆக்கினைக்குத்தான்பயந்து ஆச்சியம்மேபோனாலும்
பவளம்விளைகின்ற பலமான அக்காட்டில்
ஆனைத்தலையை அறியுங்கதண்டுகளும்
சிங்கத்தலைபோ லிருக்குமாஞ்செங்குளவி

ஐந்துவருஷமாய் அவரைமறந்திருந்தேன்
மறந்திருந்த அர்ச்சுனரை வரவழைத்தேனானாலே
மோகத்தினாலே வரவழைத்தேனென்பார்கள்
ஊரிலேயுள்ளவர்கள் நகைப்பார்களிப்போது
நாட்டிலேயுள்ளவர்கள் நகைப்பார்களிப்போது
கண்டாசிரிப்பார்கள் கலியுகந்தாரேசுவார்கள்
பார்த்தார்நகைப்பார்கள் பாலோகமேசுவார்கள்
எப்படியழைப்பிப்பேன் இயலான அர்ச்சுனரை
என்றதுகேட்டவுடன் மந்திரிகளேதுசொல்வார்
தந்தார்பெருமை யுண்டானால்தார்குழலே
பெற்றார்பெருமை யுண்டானால்மாதாவே
வளர்த்தார்பெருமை உண்டானால்தாயாரே
கொண்டார்பெருமை வேண்டாமோகொம்பனையே
கணவன்பெருமை வேண்டாமோகாரிகையே
ஆளன்பெருமையது வேண்டாமோ ஆரணங்கே
ஆனைகுதிரைகளை ஆரம்பனையில்கட்டிவைத்து
குதிரைகளைகட்டியே கோடித்துவாழ்ந்தாலும்
ஆளனிருந்து ஆளாதரசுமுண்டோ
புருஷனுமில்லாப பெருமைகள்செய்வாரோ
காவலர்கோவிலிலே கைம்பெண்டீரென்பார்கள்
மன்னவர்கோவிலிலே வாழப்பெண்டென்பார்கள்
கொண்டார்பெருமை வேண்டாமோபொற்கொடியே
புருஷன்பெருமை வேண்டாமோபொற்கொடியே
பிறைமுடிதரித்த பெண்பெருமான்தான்கேட்டு
வம்பாவர்ச்சுனர்க்கு விண்ணப்பஞ்செய்வதில்லை
மகாராசர்தருமருக்கு விண்ணப்பஞ்செய்வேணும்
ஆடாதூதுவரே அழையுங்கள்கணக்கர்களை
நாட்டுக்கணக்கெழுதும் நலமானமந்திரிகளை
சீமைக்கணக்குகள் தெரிந்தெழுதும்மந்திரிகள்
கோட்டைக்கணக்குகள் தெரிந்தெழுதும்மந்திரிகள்
ஊர்கணக்கப்பிள்ளைகளை ஓடியழையுமென்றாள்
அவ்வார்த்தைகேட்டுமந்த ஆங்காரதூதுவர்கள்
ஓட்டம்நடையுமாக ஓடிவந்தார்தூதுவர்கள்
கருணீகரானவரைக் கணக்கெழுதும்மந்திரிகள்
அல்லிப்பெருமாளும் அழைத்துவரச்சொன்னாளே
அவ்வார்த்தைகேட்டவுடனன்பாகக்கணக்கரெல்லாம்
கடுகப்பபந்தார்கள் கணக்குச்சுமைபெடுத்தார்
எக்கிலெழுத்தாணி இடதுகையில்சுருளோலை
வண்ணக்குறத்தோலை வரிசையுடன்கைபிடித்து
உச்சிகொண்டைபோட்டார்கள் உருமிகட்டார்கள்
சிங்காதனத்துக்கு முன்னாகவந்துநின்று

அல்லிப்பெருமாட்கு அடிபணிந்து தெண்டனிட்டார்
வந்தவர்களுக்கு வட்டமனை போட்டார்கள்
மணிகுடுக்கப்போட்டார்கள் வந்திருங்களப்பாவென்றாள்
தர்மாபுரயாளும் தர்மலிங்கராயருக்கும்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அத்தையார்குந்தியற்கும்
வண்ணமிட்ட ஓலையிலே வக்கணையாயெழுதவேணும்
என்னவென்றாலோலையிலே எழுதுகிறாளோலை
சோலைமலருடைய சொக்கர்திருவருளால்
ஸ்ரீரங்கநாதர் திருமால்கிருபையினால்
மதுரைமீனாட்சியம்மை மாதாகிருபையினால்
அல்லியின்மேலே ஆரணங்குபெண்பிறந்தேன்
பெண்ணாய்ப்பிறந்து பெருமாள்முடிசூட்டி
அன்னையபோல்மன்னாண்டேன் ஐம்பத்தாறுகாதவழி
தர்மர்திருவுளத்தால் தரணிபதியாண்டிருந்தேன்
இன்னாள்வரைக்கும் ஏதுகுறையில்லாமல்
வையகத்தையாண்டிருந்தேன் மனக்குறையில்லாமல்
உங்கள்-செல்வக்குழந்தையது தேவேந்திரன்பேரன்
ஐந்துபிராயமையா அழகாயவளர்ந்தபிள்ளை
செண்டடித்துப்பந்தடித்து தெருவில்விளையாடி
பொன்னின்தேரோட்டியே போதவிளையாடி
தங்கத்தேரோட்டியே தனித்துவிளையாடி
வெம்பலாய்க்காய்ந்து விழுந்துபடுக்கையிட்டான்
பாலைக்கக்கிறதும் பதறிவாய்ப்பினத்துறதும்
தலையைப்புரட்டுறதுந் தாகமெடுக்கிறதும்
நாக்கைவரட்டுறதும் நயனங்கள்சோர்கிறதும்
பார்த்தபரிகாரி பண்டிதர்பணிக்கர்களும்
தோஷித்துபோச்சுதென்று சொன்னார்களெந்தனுக்கு
கைதப்பிக்காணுமென்று கற்பித்தாரென்னோடே
என்னமோஏதோவென்று இருக்குது என்மனதில்
பொய்சொன்னேனென்று எண்ணாதீர்புண்ணியரே
ஓலைகண்டநாழிகைக்கு வரவேணுமுத்தமனே
கண்ணாலேபார்க்குறதுக்கு கடுகெனவேவந்திடுங்கள்
என்றதுசொல்லியே எழுதுங்களோலையென்றாள்
சீர்கணக்கப்பிள்ளைகளும் சொல்வசனந்தான்கேட்டு
சேமக்குருத்தோலை சிக்கெனவேதானவாரி
அல்லியம்மாள்சொற்படிக்கு அவ்வோலைதானெழுதி
ஓலைச்சுருள்மடித்து செந்திரிக்கைதான்போட்டார்
சிக்காய்நல்லமுத்திரை திருவகுப்பின்கீழ்ப்போட்டார்
அவ்வோலைதானெடுத்து ஆவத்தவாழ்காரி
காற்றிலதிகமுள்ள கடுந்தூதாளையழைத்து
நாழிகைக்குநாதவழி நடந்தோடுந்தூதுவரே

தருமருக்குகொண்டுபோய் கொடுமென்றுள்ளதையவரும்
பலேயோம்டதலைகொடுத்து மனனெழுந்திருந்து
ஓலைச்சுருள்வாங்கி வோங்கிட க்கலுற்றான்
மதுரைத்தெருகடந்து வைகைக்கரைகடந்து
காடுகடந்து கரியமலைதான்கடந்து
சில்லென்றுபூத்த செடியூவனங்கடந்து
புல்லென்றுபூத்த புலியின்வனங்கடந்து
ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனங்கடந்து
பாதிரிமுல்லை பருத்தவனங்கடந்து
தருயாபுரமருகில் தான்வாருன் தூதுவனும்
பத்தாம்படியில் பவழக்கால்மண்டபத்தில்
தருமரிடகொலுவுக்குத் தான்வநதுநின்றவனும்
ஓலைச்சுருள் வைத்து உத்தமனுக்கெண்டனிட்டான்
ஆர்பணிதூதாநீ அறியவுரையுமென்றார்
மதுராபுரியாளும் வாழ்வரசிஅல்லியம்மாள்
அவள்பணியென்றுசொல்லி அடிவணங்கிதெண்டனிட்டான்
ஓலைச்சுருள் விரித்தார் உத்தமனார்தருமலிங்கம்
அதிலிருக்குமர்மமெல்லாந் தருமலிங்கதாணறிந்தார்
நபமைமதிததாளே நாடாளும்ராசாத்தி
ஐயோமகனேயென்று அழுதுபுலம்புகிறார்
சிவசிவாவென்றுசொல்லி சோர்ந்துமேதான்விழுந்தார்
தம்பிவயிற்றிலே பிறந்ததனஞ்செயனே
மதுரைநகராளுகைக்கு மைந்தனென்றுநானிருந்தேன்
தீர்ந்துமேதானனை சிவலோகமபோறாயோ
சொக்கரிடபாதஞ் சேருகைக்குநாளாச்சே
ஐக்கியமாய்ப்போகவே ஆச்சுதோஉன்சீவன்
பொன்னுமணியே புலந்திராசாவே
அல்லிமகனே அழகுபுலந்திரனே
கட்டிமகனே கயிலாயம்போறாயோ
பொன்னுங்குடமேநீ புஷ்பகமேபோறாயோ
கோவென்றசத்தமுடன் குமுரிப்புலம்பலுற்றார்
வெற்றிமதயானை வீமனவன்கேட்டு
தானுமழுதானே தருமருடனுகை
நகுலசகாதேவ ராசர்புலம்பலுற்றார்
மந்தாரக்குந்தியரும் மாதாவுமபுலம்பலுற்றார்
சங்கோதியாளகூடத் தானும்புலம்பலுற்றார்
அந்தநகரும்நாடும் அரசுந்தளும்பினது
தக்கபுகழுடைய தருமரவரேதுசொல்வார்
வில்லாளிபார்த்தன் விசையனெங்கேசென்றானோ
அர்ச்சுனரைக்கண்டுநான் ஐந்தாறுநாளாச்சே
எங்கேயிருப்பிடமோ ஒன்றுமறியோமே

ஆரடா தூதுவரே அழையுங்கள் கோட்டிதன்னை
தமுக்கடிக்குங் கோட்டிதனைத் தானழைத்துவாருமென்றார்
என்றுசொல்லத்தான்கேட்டு எழுந்தோடி தூதுவர்கள்
பறைபறையுஞ்சாம்புவனை பார்த்தழைத்துவாருமென்றார்
தருமராஜன்கண்டவுடனவனும் சாஷ்டாங்கந்தெண்டனிட்டான்
எனையழைத்தது ஏதுகருமமென்றான்
அப்போது தருமலிங்கம் ஆணழகரேதுசொல்வார்
பாராளுந்தருமருக்கு பாக்கதுசொக்கிற்றென்று
மெத்தவேபல்லிக்கை காணுதுவெந்தனுக்கு
விஜயப்பெருமானை வைத்திருந்தால்விட்டிடுங்கள்
என்று-தருமாபுரமெல்லாம் தமுக்கடித்துவாருமென்றார்
வீதிபதினாயிரம் வீரமுரசடியுமென்றார்
இவ்வார்த்தைகேட்டவனும் எழுந்தசாம்புவனும்
ஆணையேறிமாலைசூடி அடித்தானே பறையோசை
தருமாபுரவீதியெல்லாந் தமுக்கடித்தானாளும்
என்னசொல்லிதமுக்கடித்தான் இயலானசாம்புவனும்
பாராளுந்தருமருக்குப் பாக்கதுசொக்கிற்றென்று
கலைதாங்கிப்போச்சுது கட்டழகர்தருமருக்கு
பேச்சுமூச்சில்லாமல் பிணம்போல்கிடந்துவிட்டார்
அனைவோருமங்கே அழுதுபுலம்புகிறார்
அர்ச்சனராசாவை யார்வைத்திருந்தாலும்
கண்டவர்விட்டிடுங்கள் சடுதியனுப்பிடுங்கள்
என்றுஅடித்தானே இயலானதமுக்கோசை
சொல்லியடித்தானே தேர்விஜயன்தான்கேட்க
தேவதாசிதெருவுகளுந் தெருவுபதினாயிரமும்
அத்தெருவுபெண்களெல்லாம் அனைவோருமேதுசொல்வார்
காளையருச்சுனரை கண்ணாலேகண்டதில்லை
எங்களிடவீதியிலே எழில்விசயன்வாரதில்லை
மாதுசுபத்திரையாள் மச்சினியாள்வீதியிலே
அங்கேயிருப்பார்காண் அருச்சுனவீரியனார்
அவர்சத்துருவேயென்று சாமத்திற்கண்டதுண்டு
உத்தமனேயென்றுசொல்லி ஓமத்திற்கண்டதுண்டு
ஓமப்புகையிலேதான் உடனிருந்தபாவமுண்டு
தாகத்துதண்ணீர்க்கு கையேந்திநின்றதுண்டு
அம்மிமிதித்ததுண்டு அருந்ததிபார்த்ததுண்டு
ஆளனிவனென்று அனைவோருஞ்சொல்லுவார்கள்
இவ்விடம்வாராரோ எழில்விசயனருச்சுனனும்
இடைச்சியுடமாளிகையில் இருப்பாரெனறுக்காமல
அவன்-அந்தத்தெருகடந்து அப்பாலேபோகலுற்றார்

சுபத்திரையாள் வீதியிலே தமுக்கோசைமுழக்கிவைத்தான்
தருமருக்குத் தக்கதொரு தாழ்வெல்லாஞ்சொல்லலுற்றான்
அடித்ததமுக்கோசை அருச்சுனருங்கேட்டுவிட்டார்
தேர்விசயன்கோமானுந் திடுக்கிட்டுத்தானெழுந்தார்
பஞ்சணைவிட்டுமெலவே பதறியெழுந்திருந்தார்
சுபத்திரையாள் கண்ணே விழித்தவருமேதுசொல்வாள்
ஆர்வாசல்செல்ல எழுந்தீர்காணழகா
எவள்வாசல்செல்ல எழுந்தீரவெற்றிவிசையா
தீயிற்பிறந்தவளை சிந்தையில்நினைத்தீரோ
மின்னொளியாள்வாசலுக்கு போகநினைத்தீரோ
நாககன்னிவாசலுக்குப் போகநினைந்தீரோ
மதுரைதுரையல்லியரை மனதில்நினைத்தீரோ
மற்றொருவரைசிந்தையில் நினைத்தீரோமன்னவனே
ஆற்றமேலேயாசைகொண்டு ஆணழகாநீயெழுந்தாய்
என்றவள்கேட்டவுடன் காழிவிசையனேதுசொல்வான்
அல்லகாண்பெண்ணரசே ஆரணங்கேநீகேளாய்
பாராளுந்தருமருக்கு பாக்கதுசொல்லிநாம்
மெத்தவும்பல்லிக்கை தோணுதாம்மெந்தருக்கு
அதிபினப்பாயிருக்குது தருமமன்னனுக்கு
முகத்தில்விழிக்கவென்னை மெய்தழலேதுகிறார்
அதுதான்கருமமென்று அறிந்தேதானாலவாறேன்
சித்தாயன்தங்கையவள் சுபத்திரையாளேதுசொல்வாள்
தருமர்துவாசலல்லால் தையல்மார்வீடுசென்றால்
மற்றொருத்திவீடுநீ சென்றாலோவிசையா
நீஉண்ணும்போதல்லாமல் உண்ணேன்காண்பாலமிர்தம்
நீஇருந்திடும்போதல்லாமல் தின்னேன்தானடைக்காயும்
என்றதுதான்கேட்டு காழிவிஜயனேதுசொல்வான்
உன்னைத்தனியாய்விட்டு உலாளந்தான்தங்கையமே
இன்றொருத்திவாசலுக்குப் போகேனென்றனேதே
அன்னையைத்தானோபார்த்து அசைதுணைத்திலமேரண்டி
பாலடிசிலுண்டுநீ பாக்காயமுதுசெய்து
பாயசங்களுண்டு மகிழ்ந்திருந்தானங்கைமேர
வாடாதேநீயிருக்காண் மாதரிளங்கொடியே
போகச்சிலவருளும் போய்வாரேன்பெண்ணேயென்றார்
தளராதகேசவதர வேண்டியதுனைதயலமே
தமாமேநீயிருந்து சற்றேசெலவருளும்
மாதுசுபத்திரையாள் வாய்திறந்தேதுரைப்பாள்
ஆனாலும்உம்மைநான் அடையாளஞ்செய்திடுவேன்
அடையாளந்தறையாமல் அருச்சுனரேவாருமென்றாள்
வைத்தஅடையாளம் மாறாமல்வாருமென்றாள்
சந்தனமுங்குங்குமமுஞ் சவ்வாதுந்தான்குழைத்து

அர்ச்சுனன்மார்மேலே அள்ளியணைந்தாளே
சந்தனத்தாலே சதுராய்படமெழுதி
குங்குமத்தாலே குறிப்பாய்படமெழுதி
முத்திரைமோதிரத்தால் முன்பாயில்குறியும்வைத்தாள்
மாதரிடவாசலுக்கு மயிலணையேபோனக்கால்
உன்-குறிவந்துகூப்பிடுமோ கொம்பேரிடையாளே
உன்- ஆணைவந்துகூப்பிடுமோ ஆனந்தவாழ்மாரி
இருபிருமென்றுசொல்லி எழில்விசையன்போய்நடந்தார்
நீண்டிடும்கால்களுக்கு நெரிஞ்சிப்பூசல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளப்பூசல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூசல்லடமம்
தூக்கியிடுங்கால்களுக்கு துத்திப்பூசல்லடமாம்
சந்திரகாந்திகட்டிகட்டிக் தாமரைப்பூசங்குவிட்டு
சிங்காணிவில்லெடுத்து தேர்விசைசன்போய்நடந்தார்
பொன்னிழைத்தபட்டாடை பூமியிற்புரண்டுவர
பூங்காவனம்புகுந்து புட்பமலரெடுத்து
தருமரைபூசைபண்ணச் சம்பங்கிபூரித்து
வாய்வேகமாகவே வந்துவிட்டான் அர்ச்சுனனும்
வீதியும்வீதி தெருவுமவர்தாண்டி
தருமரிருக்கின்ற சாதிலிங்கமேடையிலே
சாந்தணிந்தமேடையிலே தருமரைத்தான்பார்த்து
தருமரிடபாதமதில் சாஷ்டாங்கதெண்டனிட்டு
கொண்டுவந்தபூமலரைக் குபுகுவென்றுதான்போட்டு
அண்ணாசரணமென் றடிபணிந்துதெண்டனிட்டான்
கைகட்டிநின்றானே கட்டழகன் அர்ச்சுனனும்
வந்துபணிந்தவனை வாழ்த்தியெடுத்தணைத்து
வாழ்வாய்வளர்ந்திடுவாய் வையகத்தையாண்டிடுவாய்
நிற்பாய்நிலைதரிப்பாய் நிலைபாசாண்டிடுவாய்
கற்பகித்ததூண்போலே கலங்காமலரசாள்வாய்
பதினெறுகலையுடைய பார்த்திபாநீகேளாய்
மதுராபுரித்துரையாள் வாழ்வரசியல்லிமகள்
பார்த்திபாஉன்மகன்தான் பாலன்புலந்திரனும்
செண்டடித்துப்பந்தடித்துத் தெருவில்விளையாடி
கோட்டில்விளையாடி வீட்டில்வந்துபாலனவன்
களைத்தாற்போல்விழுந்தானும் காளைபுலந்திரனும்
காய்ச்சலாய்காய்கிறதும் கண்ணைசசொருகிறதும்
வெம்பலாய்க்காய்கிறதும் மெத்தவாய்பினத்தாதும்
நயனங்கள்பஞ்சடைந்து நாக்கைவரட்டுறதும்
தோஷித்துப்போனதாய் தோனுதாமைநதனுக்கு
பண்டிதர்பணிக்கர்களும் பார்த்தவயித்தியரும்
கைவிட்டுப்போனாராங் கட்டழகாஉன்மகனை

முகத்தில்விழிக்கவென்று முடிபுனைந்தராசாத்தி
ஓலையெழுதியே வரவிட்டாருத்தமனை
சேதிசமாச்சாரம் சுருளோலைவந்திருக்க
போகாதிருந்தாக்கால் பிழைவந்துநேர்ந்துவிடும்
ஆகையினால்தம்பியரே அருச்சுனரேபோய்வாரும்
அச்சுதானந்தரை ஐயரைக்கூட்டிப்போம்
அவள்-ஆங்காரக்கன்னியென்று அறியோமவள்குணத்தை
மன்னனும்ராசாத்தி வலக்காரமுள்ளவர்காண்
உடம்புதெளிந்து உலாவித்திரியளவும்
வாழ்மதுரைராச்சியத்தில் மன்னுதனித்திருந்து
மைந்தன்புலந்திரனை மன்னவரவழைத்து
குமாரனைக்கூட்டிவந்து குருநாடுசேருமென்றார்
என்வார்த்தைதள்ளமால் இட்சணமேநடவுமென்றார்
போய்வாருமென்றுசொல்லி புத்திமிகவுரைத்தார்
அப்போதருச்சுனனும் அப்படியேநல்லதென்று
குந்தியம்மாள் தன்பாதம் கொப்பெனவேதெண்டனிட்டான்
தாயாருடபாதஞ் சாஷ்டாங்கதெண்டனிட்டான்
மதுரைக்குப்போய்வாரேன் மாதாவேசெலவருளும்
போய்வாருமருச்சுனரே என்றாளேபொற்கொடியும்
வெற்றிமதயானை வீமாசெலவருளும்
அத்தண்டபேரும் அனைவோருஞ்செலவருள
முகத்திலேசீலையிட்டு முடிமன்னர்தானழுதார்
ஏதுக்கழுகிறாய் ஈஸ்வரன்துணையிருப்பான்
மைந்தன்புலந்திரற்கு வாட்டமொருக்காலுமில்லை
மாயன்துணையிருப்பார் வல்விஜயாபோய்வாரும்
என்றதுகேட்டு எழுந்தானருச்சுனனும்
அச்சுதானந்தையருந்தானுமாய்
தோழனுந்தானுமாய் துரிதமாய்நடந்தார்கள்
கோட்டைகடந்து கொத்தளமுந்தான்கடந்து
தர்மாபுரங்கடந்து தான்கடந்தானருச்சுனனும்
காடுகடந்து கரியமலைதான்கடந்து
ஆறுகடந்து அரிசுனைகடந்து
சில்லென்றகாடுஞ் செடியும்வனங்கடந்து
வைகைக்கரைகடந்து மதுராபுரிதேடி
தோழனுந்தானுமாய் துரிதமாய்நடந்தார்கள்
மதுரையிலுள்ளவரைக் கண்டாரேவாள்விசையன்
அச்சுதானந்தையர்முகம்நோக்கி

மைந்தன் புலந்திறற்கு வாட்டங்களுண்டானால்
கர்மாதோ நாடு கலங்காதோ ராச்சியங்கள்
எல்லைக்கண்டபோதே எல்லாப் புலம்பாதோ
மைந்தன் புலந்திறற்கு வாட்டமொன்றுமில்லை
எத்தைநினைத்தாளோ நாடாளும்ராசாத்தி
முன்னதுபூசல் முதலைநினைந்தாளோ
ஆங்காரக்கன்னிபென அறியோமவள்குணத்தை
அச்சுதானந்த ரையருங்கூறிடுவார்
அவள்-வார்த்தைக்குவார்த்தை மறுவார்த்தைபேசாதே
சொல்லுக்குச்சொல்லு சொல்லிப்பேசாதே
நீர்-முன்னேநடவுமென்று முப்பணியிலுட்கார்ந்தார்
வாள்விசையன்கோமானும் வந்தானரண்மனைக்கு
அங்கிருக்கும்தாதுவர்கள் அருச்சுனரைக்கைதொழவும்
உங்கள் துரையெங்கேயென்றார் உலகாளும்ராசாவும்
ஆயிரங்கால்மண்டபத்தில் அங்கேயிருக்கிறார்கள்
என்றதுகேட்டு எழில்விசையன்தானடந்தான்
மாணிக்கமண்டபத்தில் வாள்விசையன்போய்நடந்தான்
கொம்பனைக்குமுன்னேவந்து கும்பிட்டான்வாள்விசயன்
கையெடுத்துகுப்பிடான் காலையருச்சுனனும்
வணங்கின அர்ச்சுனனை வாவென்றழைக்காமல்
ஏனென்றுங்கேளாமல் ஏறமுகப்பார்க்காமல்
நின்றேயருச்சுனனும் நெடுங்கால்கடுத்துவிட
இருகால்கடுத்துவிட இருநாழிநின்றதும்
ஆணலழகுமன்னன் அருச்சுனனுமேதுசொல்வான்
ஓர்-ஆளடிமையென்றாலும் அரசதுரைநாயகமே
வந்தவாரென்று வினவியேகேளாமல்
எங்குலந்திரண்ணுவே ராசகுலபெண்பெருமாள்
என்றதுதான்கேட்டு இளங்கொடியாளல்லியரும்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள் தான்கேட்டு
மன்னவார்ச்சுனன்மேல் மர்மங்கொடுப்போமென்றால்
மைந்தனுக்குப்பவளத்தேர் வாராதுயென்றுசொல்லி
அண்ணாந்துபார்த்தாளே அர்ச்சுனராசாவை
கண்டாளருச்சுனரை கனதயுள்ளமன்னரை
முகத்திலேவிழிக்கவென்று விதியோதாயெந்தனுக்கு
உன்னை-கண்ணாலேகாணக் கிடைத்ததோயெந்தனுக்கு
தப்பிபுலந்திறனும் தங்கத்தேர்கேளாமல்
மாணிக்கத்தேர்வேண்டி கேளாமல்மன்னவரே
பாண்டிவளநாட்டானும் பவளத்தேர்கேட்டதினால்
உன்னைக்-கண்ணாலேகாணக் கிடைத்ததேயெந்தனுக்கு
கண்ணனமைந்தனுக்கு திருஷ்டிகழித்துவிட்டேன்

என்றதுகேட்டாளே எழில்விஜயனருச்சுனனை
வில்வளிபார்த்தனவன் விசையனுமதுசொல்வான்
பாண்டியனாட்டுக்கு பவளத்தேர்வேண்டுமென்றால்
ஒரு-ஆளோடேசொல்லி அனுப்பிவைத்தீராலே
பவளத்தேர்சொப்பனமிட்டு அனுப்புவேன்பத்தினியே
மைந்தனபுலந்திரற்கு வாட்டங்கள்வந்ததென்று
தோஷித்துபோச்சுதென்று சொல்லியனுப்புவாயோ
தருமருந்தான்கேட்டு தயங்கியழுதாரே
வீமரதைக்கேட்டு மெத்தவழுதாரே
சரல்புகுந்ததொரு இரட்டையர்கள் தானழுதார்
மந்தாரக்குந்தியரு மாதுபுலம்பிவிட்டாள்
தீயிற்பிறந்தவளுந் திகைத்துபுலப்பிவிட்டாள்
அங்ககருநாடும் அரசுந்தளும்பிற்று
தர்மாபுரத்திலுள்ளோர் தவித்துப்புலம்பலுற்றார்
இப்படிக்குஓலை யெழுதுவதுநாயமுண்டோ
பூமியரசாண்டோர்கள் பொய்யோலையெழுதலாமோ
அவ்வார்த்தைகேட்டுமவள் அல்லியருமேதுரைப்பாள்
பாராளும்வேந்தனவன் பவளத்தேர்வேண்டுமென்று
உண்ணேன்குளியேனென்றான் உறங்கேனென்றான்பஞ்சணையில்
சாவேனபடியேனென்றான் சமர்த்துள்ளபுத்திரனும்
பாலமுதமுண்ணேனென்றான் பள்ளிக்குப்போகேனென்றான்
மெய்யாகசொல்லி எழுதினேன் ஓலையிலே
மாலைமுடியானே வருவதொருக்காலுமில்லை
சித்தசன்தங்கையவள் சிற்றிடைச்சுபத்திரையாள்
சோரவளநங்கை சுபத்திரைநாயகியாள்
அவள்மயக்கமெத்தவல்லோ ஆணழகாவுந்தனுக்கு
அவளுடையமோகமதாய் அல்லும்பகலுமாயிருப்பாய்
தேவடியாள்வீதியெல்லாந் திட்டுண்டுதிரிகிறவன்
நீர்-வாரீரோவாராரோ யென்றெண்ணிமன்னவனே
இந்த-கூத்திமேலாசையுண்டோ குழந்தைமேலாசையுண்டோ
உந்தனுளமறிய யெழுதினேனோலையென்றாள்
மெய்யென்றுசொல்லியே வந்தீரோவாள்விசையா
பவளத்தேர்கொண்டுவந்து தாரீரோவாள்விஜயா
ஆமென்றால்சொல்லுமிப்போ அல்லவென்றால்போமென்றாள்
மதுராபுரியாளே மகுடத்துரைச்சியரே
தீவாந்திரத்திற்போய் தேடியேகொண்டுவாரேன்
எங்கேயிருந்தாலும் இட்சணமேகொண்டுவாரேன்
பாங்கானபுத்திரற்கு பவளத்தேர்கொண்டுவாரேன்
எத்தனை நாளையிலே எனக்குத்தேர்கொண்டுவருவீர்
பொய்வசனஞ்சொல்லாமல் போர்விசையாநீயுரையும்

மூன்றுநாளாறு பொழுதிலேவாரேனென்று
ஒன்பதுநாளையிலே உனக்குத்தேர்கொண்டுவாரேன்
பவளம்வெட்டபோனிடத்தில பார்த்தீரா ஆர்ச்சுனரே
தேர்வேண்டிப்போனிடத்தில் தேர்விசையா அர்ச்சுனரே
கானகத்திற்கன்னியரை கண்டுமயங்காதே
பல்லைத்திறந்திடுவாய் பரிகாசஞ்செய்திடுவாய்
மருமங்களாகவே இருப்பீரோமன்னவரே
அப்படியாகவே இருந்ததேஉண்டானல்
எமலோகஞ்சென்றாலும் இட்டுவந்துசங்கரிப்பேன்
பாதாளம்போனாலும் கொண்டுவந்துசங்கரிப்பேன்
வாள்விசையாருச்சுனனும் மருக்காமலேதுரைப்பார்
ஐந்துபிராயம் அழகுள்ளபுலந்திரனர்
மைந்தர்மேலாணையது மச்சாகக்கொண்டுவாரேன்
மைந்தர்மேலாணையிட மனதுதுணிந்ததோதான்
பிள்ளையின்மேலாணையிடப் போதமனம்வந்ததோ
ஏதாய்துணிந்தது என்மகன்மேலாணையிட
இருவருமாகவே யிருந்தங்கேபேசயிலே
அச்சுதானந்த ரையரும்வந்துவிட்டார்
குருக்கள்மகனைக் கொம்பனையாள் தான்பார்த்து
வாருமென்றுதானழைத்தாள் மதுரைதுரையல்லியரும்
வையைவளநாடறிந்து வந்தீரோமன்னவனே
வாழ்மதுரைதேடி வழியுந்தெரிந்ததோ
மதுரைக்குஓர்பயணம் வாருமிருந்தென்ன
என்னைசிறைவைத்தாரோ எழில்விசையன்தோமானும்
என்னைமறந்து யிருந்தானெழில்விசையன்
அவர்தான்வருகாமல் போனாலுமச்சுதரே
நீர்தானொருபயணம் இங்குவாராகாதோ
வாள்விசையனில்லாத வரவுஞ்செலவுமில்லை
நல்விசையனில்லாமல் நான்தான்வருவேனோ
ஆனல்கேளையாவே அச்சுதானந்தரே
பிள்ளைபுலந்திரனர் பவளத்தேர்கேட்டதினல்
ஆசையினாலே யழைப்பித்தேனருச்சுனனை
மாலையிட்டநாள்முதலாய் வணங்காதகன்னிகைநான்
மைந்தனுக்காகவே வணங்கினேனருச்சுனனை
பாண்டிவளநாட்டுக்குப் பவளத்தேர்கொப்பனிட்டு
மூன்றுநாளாறு பொழுதிலேவாரேனென்று
மைந்தன்மேலாணையென்று மன்னவரும்வாரார்காண்
அண்ணாவேநீரும் அறிந்திலையோவென்றாள்
அம்மா-எந்தெந்தஆணை மறந்தாலும்வாள்விசையன்
மைந்தர்மேலாணை மறப்பாரோவாள்விசையன்

எப்படியுங்கொண்டு வருவானெழில்விசயன்
இப்படியாகவே யிருக்கிறதவேளையிலே

## பாண்டியர்கள் அர்ச்சுனனைக் காணவருதல்.

அர்ச்சுனர்வந்தசேதி அறிந்தந்தபாண்டியரும்
மருமகனைக்காணவென்று வாறாகள் பாண்டியர்கள்
மகாமேருபர்வதம்போல் மகிழ்ச்சியுடன் வாறார்கள்
பொன்னுமலைநாடாளும் போர்எழுதிபார்கூட
அல்லியம்மாள் தன்னருகே அனைவோரும்வந்தமர்ந்தார்
மகுடத்துறைச்சியாளும் வணங்கினளப்போது
வாருமிருங்கவென்று மரியாதைபண்ணினார்
அருச்சுனரைத்தான்பார்த்து ஆயிரம்பாண்டியரும்
மதுரை வரவுமக்கு வழியுந்தெரிந்ததோ
மதுரைகொருபயணம் வாறதிருந்தென்ன
வாறாமல்நீயிருக்க வைராக்கியங்களுண்டோ
அந்திமாம்பூத்ததுபோல் அதிசயமாய்த்தோணுது
பிறவாமுடிதரித்த பெண்பெருமானேதுசொல்வாள்
பாண்டிவளநாட்டாளும் பவளத்தேர்கேட்டதினால்
ஆசையினாலே அழைப்பித்தேனினிவரை
சீக்கிரமாய்தீவுக்கு போங்காணுந்தேர்விசையா
ஆறாயிரவர் அணிதிரளாம்பாண்டியர்கள்
வந்தக்காலாரவில்லை மாதுகுலப்பெண்ணரசே
இன்றொருநாள்போக்கி இனியொருநாளாகாதோ
பசியோடிருக்கிறார் பாலமிர்தம்செய்யுமென்றார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள் தான்கேட்டு
பாண்டிவளநாட்டுக்குப் பவளத்தேர்வந்தபின்பு
விருந்துசமைக்கிறதும் வெகுமானம்பண்ணுறதும்
சீக்கிரமாய்தீவுக்கு சென்றநடவுமென்றாள்
காண்டாவனமெரித்த காளையவன் தான்கேட்டு
மைந்தன்புலந்திரற்கு வாட்டமுண்டாச்சுதென்று
மைந்தராதுவத்தாரம் வந்தவுடனே நான்
சிவபூசைபண்ணவில்லை சலபானஞ்செய்யவில்லை
நான்-காலால்நடவாமல் காற்றாய்ப்பறந்துவந்தேன்
இன்றைப்பகலுக்கு இருந்துநான்போறேனென்றான்

## அருச்சுனனுக்கு விருந்திடல்.

பிறவாமுடிதரித்த பெண்பெருமாள் தான்கேட்டு
தனக்குத்தொழில்செய்யுந் தாதிமுகம்நோக்கி
அடிசில்சமையுமென்றாள் ஆனந்தவாழ்மாரி
அப்போதுதாதியர்கள் ஆரணங்குதானெழுந்து

பத்துவிதக்கறியும் பதினெட்டுபெச்சடியும்
நல்லபொறிக்கறியும் ராசாக்கள் போசனமும்
பச்சென்றகாயும் பவளம்போலநற்கறியும்
போதச்சமைத்தார்கள் பொற்கொடிமாதரெல்லாம்
அடிசிற்சமைத்ததென்று அல்லியாக்குத்தெண்டனிட்டு
அமுதுண்ணுஞ்சாலையிலே அல்லியருமருச்சுனனும்
போசனங்களுண்டு புண்ணியருங்கையலம்பி
சிங்காதனத்திலே சேரவேவந்தாகள்
அப்போது அல்லியரும் ஆரணங்குதானெழுந்து
காச்சாக்களிப்பாக்கும் கப்பமாறுவெற்றிலையும்
ஆரங்கிபாக்குகளும் மோரங்கிவெற்றிலையும்
வாகாயிலைச்சுருளும் வர்ணத்துவாபாக்கும்
கோவையிலைச்சுருளும் கொத்துதுவர்பாக்கும்
அள்ளிக்கொடுத்தாளே ஆணழகனுக்கு
அந்தச்சமயத்திலே அருச்சுனராசாவும்
வம்புபரியாசஞ் செய்தாரே அருச்சுனரும்
அப்போது அல்லியம்மாள் ஆரணங்கேதுசொல்வாள்
ஐந்துவருஷமாக ஆர்ந்திருந்தகருமதனை
இன்றெழுந்தநாழிகையில் நினைத்திருக்கதர்மமுண்டோ
என்னாலேயாகாது என்றாளே அல்லியம்மாள்
அப்போதருச்சுனனும் ஆணழகனேதுசொல்வான்
பன்னிருகாதவழி பவளவனம்போறேனான்
மனஸ்தாபம்பண்ணாதே மாலைமுடியாளே
மனஸ்தாபமென்னலுமே மாதுதலைகுனிந்தாள்
தலைகுனிந்தசாடைதனைக் கண்டந்ததாதியர்கள்
தென்புறம்பள்ளியறை தேன்மொழிக்குத்தான்திறந்து
வலப்புறம்பள்ளியறை மயிலணைக்குத்தான்திறந்து
கட்டிலின்மெத்தைதனை கனக்கவிரித்துதரி
காம்பரிந்தமல்லிகைப்பூ கட்டிலின்மேல்பரப்பி
கச்சாயம்பன்னீரும் வைத்தார்கிளிமொழிக்கு
மஞ்சத்தின்மேலாக மன்னவனுங்குதித்தேறி
தக்கோலந்தின்று தனித்துவிளையாடி
வெற்றிலைதின்று விரும்பிவிளையாடி
கச்சாயந்தின்று களித்துவிளையாடி
காமக்கடலிலவர் முழுகித்தெளிந்தார்கள்
மோகக்கடலிலவர் முழுகித்தெளிந்தார்கள்
தீராதஆசையெல்லாந் தீர்த்தானேதேர்விசயன்
ஆறாதஆசையெல்லாம் ஆற்றினானாணழகன்
மஞ்சத்தைவிட்டிறங்கி வந்தாரிருவருமாய்
மஞ்சள்நீர்ச்சாலையிலே வந்துபுகுந்தார்கள்

காலோடுசையுங் கனிவாயுஞ்சுத்திசெய்து
மார்போடுதோளும் மதிமுகமுஞ்சுத்திசெய்து
அலங்காரமண்டபத்தில அமர்ந்தாரிருவருமாய்
தாமமுடியார்கள் சதுராகப்பார்க்கலுற்றார்
அந்தச்சமயத்தில் அழகுபுலந்திரனார்

புலந்திரன் தகப்பனிடம் வருதல்.

வீதிவிலாசமது விளையாடிவேவேந்தன்
பந்தடித்துசெண்டித்து பாலன்விளையாடி
தாயாரருகே தாவேவந்தணைடவந்தான்
மகனாரைக்காணவே வாரியெடுத்தணைத்து
உச்சிமுகந்தாளே உள்ளங்கால்முத்தமிட்டாள்
உங்கள்-ஐயர்மடியிலே செல்லுமென்றாளரணங்கு
அப்போபுலந்திரனும் அர்ச்சுனன்முனேவந்தான்
வாரியெடுத்தாரே மகனார்புலந்திரனை
அப்பாவருகவென் அழகுள்ள இந்திரனே
பொன்னுக்குடமே புலந்திரனேவாருமென்றார்
தேர்விசையனருச்சுனனும் புலந்திரனுக்கேதுசொல்வான்
அப்போபுலந்திரனும் அர்ச்சுனற்கேதுசொல்வான்
ஐயாவேவீரேகேளும் ஆண்மையுள்ள அர்ச்சுனரே
தங்கத்தேர்தந்தாரே தனஞ்செயனென்பாட்டன்
செம்பொன்தேர்தந்தாரே சிருடையனென்மாமன்
மாணிக்கத்தேர்தந்தாரே மண்டலத்துராசாக்கள்
முத்துத்தேர்தந்தாரே முடிமன்னராசாக்கள்
இத்திரவீதிகளும் தெருவுபதினாயிரமும்
மட்டில்லாவீதி மதுரைக்குஒட்டிவைக்க
பாண்டியப்பெருமாளை பவளத்தேர்நான்கேட்டேன்
அப்படியேநான்தருவேன் அஞ்சாதேயென்மகனே
தீவுக்குப்போறேன் தீவிரமாய்க்கொண்டுவாறேன்
எங்கேயிருந்தாலும் யிட்சணமேகொண்டுவாறேன்
எத்தனைநாளையிலே எனக்குத்தேர்கொண்டுவாரீர்
மைந்தனவர்கேட்டு மனதுதெளியாமல்
மூன்றுநாளாறுபொழுதிலே கொண்டுவாரேனென்றார்
ஒன்பதுநாளையிலே உனக்குத்தேர்கொண்டுவாரேன்
இருமிருமென்றுசொல்லி எழுந்திருந்தாமன்னவனும்
அச்சுதானந்த ரையனுந்தானுமாய்
எழுந்துநடந்தாரே யிந்திரமலைமேலே
கூடநடந்தாளே கொம்பனையாளரணங்கு
ஆனைசேனைபரிவாரங்கள் அனுப்புவித்தோராசாவே
சேனைபரிவாரந் திரளணியுங்கூட்டிவந்தே
உத்தமவீரியர்கள் இருவரும்போரீரோ

ஆனையுஞ்சேனையும் அனுப்பவும்வேண்டாங்காண்
இருவருமேபோய்வாரோம் என்றுவழிநடந்தார்
மன்னரிருவருமாய் மந்திரவாள்கைபிடித்து
வைகைக்கரைகடந்து மதுராபுரிகடந்து
எல்லைகடந்து இளந்தோப்புதான்கடந்து
காவல்கடந்து கரியமலைதான்கடந்து
வேங்கைபடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
எட்டடிவேங்கை யிருக்கும்வனங்கடந்து
பத்தடிவேங்கை பருத்தவனங்கடந்து
வேந்தரறியாத வெளிக்காடுதான்கடந்து
சிங்கமுறங்குவனம் சிறுபுலிகள் தூங்குவனம்
ஆளியுறங்குவனம் அன்னபட்சிதூங்குவனம்
கருநாரைக்கிரைதேடுங் கதலிவனங்கடந்தார்
பவளம்விளைகின்ற பாங்கானகாடுகண்டார்
செங்காடுதீபட்டாற்போல் தோணுவதைக்கண்டார்கள்
அச்சுதானந்த ஐயரேயென்தோழா
நான்-போகாதகாடுமில்லை ஆடாததீர்த்தமில்லை
பார்த்தாரிருவருமாய் பவழக்காடுநுழைந்தார்
கொம்புங்கயிறுகளும் கலந்தகொழுந்துகளும்
ஓடிப்படர்கிறதும் உயர்ந்தகொம்பாய்நிற்கிறதும்
தாவிப்படர்கிறதுஞ் சன்னல்பின்னலாகிறதும்
வேரிற்பவளமது மின்னுகிறகாந்திகளும்
பார்க்கமுடியாத பவளம்விளைகிறதை
பவளப்புதுமைகளைப் பார்த்துதிகைத்துநின்றார்
அக்காட்டிற்றானிருக்கும் ஆங்காரக்கதண்டுகளும்
ஆனைத்தலையை அறியுங்கதண்டுகளும்
குதிரைத்தலைபோ லிருக்குமாங்கருங்குளவி
சிங்கத்தலைபோ லிருக்குமாஞ்செங்குளவி
முழமளவாய்மார்பளவாய் வெளிப்பட்டுவந்தது
விஜயனைக்கொல்லுகைக்கு வந்தகதண்டுகளும்
மன்னனருச்சுனரின் மட்சரேகையைப்பார்த்து
தேவாதிபிண்டமிவன் தேர்விசையனருச்சுனன்காண்
பேருல்பேர்பெற்ற பெருமானிவர்காணும்
இவரை-நாம்கொன்றோமேயானக்கால் குடிகேடுவந்துவிடும்
நமது-கூட்டமழிந்துவிடும் குலகேடுவந்துவிடும்
என்றுபயந்து எழும்பிக்கதண்டுகளும்
அஞ்சிப்பயந்து அடவியில்சென்றதுகாண்
ஆறெழுகனவான் அருச்சுனனுமேதுசொல்வான்
அச்சுதானந்த ஐயரேயென்தோழா
நான்-தேவாதிபிண்டமென்று தெரிந்துகதண்டுகளும்

நம்மைக்கண்டபோதே நரி நெஞ்சுசென்றதுதான்
என்றவர்கள்சொல்லி யிருக்குமந்தவேளையிலே
கானகவேடுவர்கள் அவ்வழியேவாருர்கள்
அர்ச்சுனன்மாயவனை அறிந்தாரேவேடுவர்கள்
கண்டுபார்ந்தார்கள் கழுகிவந்துதெண்டனிட்டார்
வேடுவரோநீங்களென்று விஜயனார்கேட்கலுற்ருர்
ஆமையாநாங்கள் ஆரணியவேடரென்ருர
இக்காட்டுக்குள்ளே இருக்குந்தலங்களுக்கு
உங்களைக்கொல்லாதோ உத்தமரேசொல்லுமென்ருர்
கதண்டுகள்கொட்டாதோ காவலரே உங்களையும்
தென்னட்டுப்பேர்களைத் தீண்டாது கதண்டுகளும்
முகமறியாதவரை முறித்துக்கிடத்திவிடும்
பவளம்வெட்டவந்தவரை எமலோகஞ்சேர்த்துவிடும்
கதண்டுகொட்டிசெத்தவர்கள் கணக்குமிதங்களில்லை
எங்கள் துரைபவளக்கொடி எழுப்பினதனந்தமுண்டு
செத்துமடிந்தவரை சீவனுடன் எழுப்பிடுவாள்
என்றுமவர்சொல்ல ஏதுசொல்வானருச்சுனனும்
எங்கள் துரைபெண்ணீரே உங்கள் துரைபேரென்ன
ஆருடையராச்சியங்கள் அறியவுரையுமென்ருர்
பெண்ணரசுதானே புண்ணியரேசொல்லுமென்ருர்
அந்தவரலாற்றை அன்பாகச்சொல்லுமென்ருர்
ஆனல்கேளையாவே அடியேனுரைத்திடுவேன்
சேரும்புராசாக்கள் துரைகளவரைம்பதுபேர்
ஐம்பதுராசருக்கும் ஆணுமில்லைபெண்ணுமில்லை
பவளக்கொடிராச்சியதனை ஆளுகைக்குபாலனில்லை
காணுதகோயிலுக்கு காணிக்கையனுப்பிவைத்தார்
இலையிலேசாதமுண்டால் என்னதவமென்றுசொல்லி
தரையையவர்மெழுகி சாதங்களுண்டார்கள்
பாலைடைக்குப்பால்கொடுப்பார் பசித்தார்முகம்பார்ப்பார்
தவித்துவந்தபேர்களுக்குத் தண்ணீர்ப்பந்தல்வைத்தார்கள்
சாலைகள்போட்டுவைத்தார் சத்திரங்கள்கட்டிவைத்தார்
நல்லதண்ணீர்கிணறுகளும் நடைப்பாயுங்கட்டிவைத்தார்
சோகிபரதேசிகட்கு திருமடங்கட்டிவைத்தார்
குளங்களெடுத்துவைத்தார் கோபுரங்கள்கட்டிவைத்தார்
என்னதவம்பண்ணினலும் எதிலும்பிள்ளையில்லை
பத்தாண்டுசென்று பெய்ந்தபெருமழைக்கு
தெப்பலாய்நின்று மிதந்துதவம்பண்ணுர்கள்
மைந்தனைவேண்டியல்லோ மாளிகைமறந்தார்கள்
புத்திரனைவேண்டியல்லோ பூமிமறந்தார்கள்
அவர்மேல்-ஆலம்விழுதோடி அறுத்துமுளைத்திடவும்



வேடன் பவளகொடியா ளழகைச் சொல்வது.

நீர்முட்டைபோலிருக்கும் நேரிழையாள் தன்னழகு
சேல்கெண்டைபோலிருக்கும் தேன்மொழியாள் தன்னழகு
மேற்புருவமிரண்டழகும் வேப்பிலைச்சாயலைப்போல்
மயிரழகும்பாவனையும் வண்டுமுதுகதுபோல்
ஈச்சம்பழத்திலே யிருண்டகருப்புமுண்டு
அவள்-மார் ரேகறுப்பொழிய மற்றக்கறுப்புமில்லை
அவள்-புருவங்கருப்பொழிய பின்னைக்கருப்புமில்லை
தேய்பிறைச்சாயலைப்போல் சிறுநெற்றி தன்னழகும்
சீரியமூக்கழகும் சிவந்தமுகத்தழகும்
முத்துப்போலபல்வரிசை முருக்கிதழ்போற்செவ்வுதடும்
வாழத்தண்டுபோல வளர்ந்தவிடையழகும்
கருத்தழகும்பாவனையும் கமுகுகுலைசாய்ந்ததுபோல்
அகண்டபுஜமழகும் ஆலிலைபோலத்தன் வயிறும்
முளைத்தெழுந்தமூங்கில்போல் மொய்குழலாள் தன்புஜமும்
பத்துவிரலழகும் பயித்தங்காய்நெத்ததுபோல்
சிங்கத்திடையழகும் சீரணவிடையழகும்
இருதுடைரண்டழகும் இளவாழைத்தண்டதுபோல்
முத்துப்புதைத்ததுபோல் முழங்காலிரண்டழகும்
பாம்பின்படம்போலே பாதத்திரண்டழகும்
புத்தகஞ்சேர்ந்தாற்போல் புறங்காலின்பின்னழகும்
அவளுக்குஒப்பானோர் ஆருமில்லைவையகத்தில்
சுவரிலெழுதலாம் சித்திரம்போல்பார்க்கலாம்
படத்திலெழுதலாம் பதுமைபோல்பார்க்கலாம்
சந்திரன்போலே ததும்புருள் தையல்நல்லாள்
சூரியனைப்போலே துலங்குகிறாள் தோகையரும்
ஈயத்தைக்காச்சி யிலையிமேலேவிட்டாற்போல்
பொன்னையுருக்கியே பூமியிலேவிட்டாற்போல்
தங்கத்தைக்காச்சி தரையிற்கவிழ்த்தாற்போல்
நீருபூத்தநெருப்பை ஊதிப்பார்த்தநிறம்போலே
ஆயிரமின்னலிலே சோதிமின்னல்பிறந்தாற்போல்
பார்க்கமுடியாது பத்தினியாள் தன்னழகை
அவ்வார்த்தைகேட்டுமே அர்ச்சுனனுமேதுசொல்வான்
அவளை-மண்டலத்துராசாக்கள் மாலைதரித்தாரோ
கன்னியிளங்கொடிக்கு கலியாணஞ்செய்தாரோ
என்று-விசயனவன்கேட்கையிலே வேடுவனுமேதுசொல்வான்
நாலுலட்சங்கோடியுண்டு நாயகியைநாடிவந்தோர்
பத்துலட்சங்கோடியுண்டு பத்தினியைக்கேட்டவர்கள்
வண்ணலட்சங்கோடியுண்டு மாதரைக்கேட்டவர்கள்
கைநீட்டிமாலையிட்டோர் காசினியிலாருமில்லை
நித்தியகன்னியாகவே யிருக்கிறாள் நேரிழையாள்

நல்லதுவேடுவனே நாயகிமாதரவள்
கன்னியிளங்கொடியும் கனவேட்டையாடுவளோ
வேட்டைக்குவாராளுண்டோ வேடுவனேசொல்லுமென்றார்
மாதந்தக்கன்னியரும் வாராளேவேட்டைமுகம்
ஆனாற்கேளையாவே அடியேனொருவார்த்தை
திங்களொருபயணம் வாராளேதேன்மொழியாள்
மற்றொருநாளையிலே வருகிறதில்லையென்றான்
ஆனாற்கேள்வேடுவனே அறியவொருவார்த்தை
காட்டிற்குவந்தாலே கன்னியிளங்கொடியும்
பவளக்கொடியாளும் பாரிவேட்டைவந்தாலே
இந்தவனத்திலே யிருக்குமிருகங்களெல்
எந்தமிருகத்தின்மேல் இச்சையுண்டுமாதருக்கு
ஆனாற்கேளையாவே அடியேன்வாய்விண்ணப்பம்
எந்தமிருகமது எதிர்ப்பட்டுவந்தாலும்
கண்டமிருகத்தை கண்டிப்பாள்தப்பாமல்
அன்னத்தைக்கண்டாலே ஆசையாய்விட்டிடுவாள்
வெட்டிவெறிந்திடுவாள் வீரமணிவாளாலே
பன்னிருகாதவழி பவளம்விளைகிறது
நடுவேயிருக்கிறது நாயகியாள்கோட்டையது
ஆனால்நீர்போய்வாரும் அன்புள்ளவேடுவனே

## அருச்சுனன் பவளக்கொடிமேல்
## மோகித்தல்.

அச்சுதானந்த ஐயரேயென்தோழா
ஆரணங்குவார்த்தைதனை யன்பாகக்கேட்கையிலே
மன்மதபாணமது மார்புருகிப்போகுதே
சித்தசன்தொட்டகணை சிறுமார்புருகுதே
மாரனவனெய்தகணை மாரைப்பிளக்குதே
ஆறுருகுபாணமது மார்புருகிப்போகுதே
அவளைக்-கண்ணாலேகண்டாலே காமன்களை தீரும்
பார்த்தாலேயாமானால் பசிதாகந்தீருமென்றான்
என்றைக்குக்காண்பேனோ ஏலப்பசுங்கிளியை
மாலைதரியாமல் வருவதில்லையென்தோழா
கல்யாணம்பண்ணாமல் வருவதில்லையென்தோழா
அவளழகைப்பார்ப்பதெப்போ என்னாசைதெளிவதெப்போ
கொம்பனையாளுடைய குரலோசைகேட்பதெப்போ

அச்சுதானந்த ரையருமேதுசொல்வார்
ஏன்காணும்வாள்விஜயா இந்தமதியுந்தனுக்கு
மகுடத்துரையல்லியரும் மங்கையவள்பொல்லாதாள்
மூன்றுநாளாறு பொழுதிலேவாரேனென்று
மைந்தன்வேலாணையிட்டு வந்தீரோமன்னவனே
மற்றொருகன்னியரை மணமாலைசூட்டினால்
மகுடத்துரையல்லியரும் மங்கையவள்பொல்லாதாள்
வாழ்பாண்டிநாடுடையாள் வருவாளேபடைகூட்டி
சொல்லுக்குமஞ்சாள் துடர்ந்தபடையெடுப்பாள்
வெட்டத்துணிந்திடுவாள் வீரமணிவளாலே
வேண்டாங்காணென்தோழா வெறுத்துவிடுமவளாசை
ஆணலழகுமன்னன் அருச்சுனனுமேதுசொல்வான்
நீ-என்னதான்சொன்னாலும் என்செவியிலேறாது
மாதரந்தக்கன்னியை மணமாலைசூட்டினாக்கால்
அன்றுவிகாரந் தெளியுங்காணென்தோழா
நான்-செத்துமடிந்து செலவழிந்துபோனாலும்
மாண்டுமடிந்து வைகுந்தம்போனாலும்
செத்தயிடந்தனிலே செங்கழனிப்பூபூர்ப்பேன்
குடமெல்லிபூபூர்த்து கொண்டையிலேபோயிருப்பேன்
கொண்டைக்குப்பூவாவேன் கொசவணைக்கிற்றையாவேன்
கண்ணுக்குமையாவேன் அவள்காலுக்குமெட்டாவேன்
நாயகியாள்நெற்றியிலே நற்சாந்துபொட்டாவேன்
அவள்-முந்தாணிதொங்கலிலே தொத்திவந்தமுள்ளாவேன்
என்றுதெளியுமோ எக்காலஞ்செல்லுமோ
என்று-கைசோர்ந்துமெய்சோர்ந்து கனத்தமுகஞ்சோர்ந்து
சகலகலைதுகிலுடுத்தி தான்வந்துமேலாடி
நேமங்கெட்டுமதிகுலைந்து நினைவுதடுமாறி
மயங்கிவிழுந்தானே மாதர்மேல்நினைவாகி

பவளக்கொடியாள் வேட்டைக்குவருதல்.

அன்றையபோதையிலே ஆனந்தவாழ்மாரி
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
செங்கோலுடையாளும் சிகாரிபுறப்பட்டாள்
வேல்பொருதுங்கண்ணாளும் வெளியேபுறப்பட்டாள்
ஈட்டிபிடிமன்னவர்கள் ஏழுலட்சம்பத்துலட்சம்
சத்திபிடிமன்னவர்கள் கணக்குமிதங்களில்லை
பட்டயநேரிசமும் பாரியவில்சமுதாடும்
கிமிஜாபெரியலகு நேரிசமாம்பெரியசத்தி
கூலிசமும்சூலிசமும் குண்டுகுழல்துப்பாக்கிகளும்
எண்ணருஆயுதமும் எடுத்தரையிற்கட்டினாள்
பாராசாரிபுரவியின்மேல் பவளக்கன்னியேறினாள்

சுத்திக்குடைபிடித்தார் சூரியனைத்தான்மறைத்தார்
ஆள்பெருஞ்சேவகரும் அனந்தங்கொடிசேனைகளும்
தாதிகளும்பழம்பிகளும் தையல்மார்சூழ்ந்துவர
பத்துலட்சம்சேனையுடன் பரிவேட்டையாரானை
ஆனையின்மேல்பேரிகை குதிரையின்மேல்டங்காவும்
ஒட்டடையின்மேல்நகபத்த ஓசைகிளம்புது
பேய்த்தாரையூதவே பெரியடமாரமடிக்க
சின்னமுழக்கமே திருச்சின்னந்தான்முழங்க
ஐங்காதவழிதூரம் அதற்கேற்றபெரியதாரை
பயணப்பயணமென்று பயணபேரியடிபடுது
அந்தவனங்களெல்லாம் அதிரவருகிறார்கள்
பொங்குகடல்போலே போய்புகுந்தார்கானகத்தில்
மான்வேட்டையாடியே மயில்வேட்டைதானுடி
குயில்வேட்டையாடியே குருவிவேட்டைதானுடி
மக்காவுங்கொக்குகளும் வருங்குருவிதாராவும்
அப்புக்கொருகுருவி ஆணைக்குவெயதுவிட்டாள்
வேட்டைகளாடியே விடாய்த்துதளாந்தாளே
கானகத்துமண்டபத்தில் கடுகவந்திறக்கினார்கள்
பஞ்சணைமெத்தையிலே பதியக்கொலுவிருந்தார்
தாம்பூலமுண்டு தனியேகொலுவிருந்தாள்
வாசனைகளுண்டு பகிழ்ந்துகொலுவிருந்தாள்
கேளிக்கைபார்த்திருந்தாள் கெம்பீரநாயகியாள்
சங்கீதப்பார்த்து இருக்கிறாள்தையனல்லாள்
அப்போதுவாள்விசயன் அர்ச்சுனனுந்தானெழுந்து
அச்சுதானந்த ஐவர்முகம்நோக்கி
வந்தாள்காண்வந்தாள் மாதாளங்கொடியும்
பவளகொடியாளும் பைங்கிளியாள்வந்தாள்காண்
கானகத்துமண்டபத்தில் வந்தமர்ந்தாள்கன்னியரும்
மத்தளவோசையது கேட்குதுகாண்மாயவரே
என்னவடிவானாலும் எடுத்துக்கொள்ளும்போர்விசயா
அர்ச்சுனரேவுன்னுடத்தை யறிந்துமிருந்துநான்
அலச்சல்படும்படியாய் அறியாமலுன்பின்வந்தேன்
கதண்டுகொட்டிமடிந்தாப்போல் இருக்கின்றேன்கானகத்தில்
நீ-கால்வேறாய்கைவேறாய் கட்டிக்கிடைத்துவிட்டு
மாயவரேசுத்திவந்து மாரடித்துநீரழுங்காண்
என்னைச்சுத்திவந்து இழவுகுடுங்காணும்
பெண்ணாவடிவெடுத்துப் போதவழுதிடுங்காண்
மாரிழவுகொடுத்தெனக்கு மயிரிழவுநீர்கொடுங்காண்
கூமோசைநீயெடுத்துக் கூவியழுதாலே
பெண்குரலைக்கேட்டு பொற்கொடியும்வந்திடுவாள்
ஆரென்றுபார்க்கவே வருவாள்காணாரணங்கு

ஆரணங்குயிங்குவந்து ஆரென்றுகேட்டாக்கால்
மாலையிட்டகணவனென்று மயிலணைக்குநீநுறையும்
தீர்க்கயாத்திரைவந்தோமென்று செப்புங்காண்தேன்மொழிக்கு
மங்கிலியபிச்சைகேளும் மாதரெழுப்பிடுவாள்
ஆனங்கவாழ்மாரி அவளைமாலைசூட்டுகிறேன்
கண்ணுக்குநன்றானால் கனமாலைசூட்டுகிறேன்
அழகாயிருந்தாலே அவளைமணஞ்செய்திடுவேன்
வடிவுகள்மட்டானால் மதுரைக்குபோய்விடுவோம்
என்றுசொல்லியருச்சுனரும் எம்பெருமாளைநினைத்து
பார்த்திபனருச்சுனரும் பரமனைதானினைந்து
அருச்சுனன்கண்டுகொட்டி செத்தவன்போலிருந்தான்
பொங்கிநயைதானடக்கிப் பொட்டெனவேபூமியிலே
மூர்ச்சையடக்கியே மூடிசோர்ந்துகீழ்விழுந்தான்
செத்தவனைப்போலாகச் சோபித்துகீழ்விழுந்தான்
அச்சுதானந்த ஐயாவரேதுசெய்தார்
கால்கைகள்வேறாகக் கட்டிக்கிடத்திவைத்து

ஸ்ரீகிருஷ்ணதேவர் பெண்வடிவெடுத்துப்புலம்பல்.

பெண்ணுவ்வடிகொண்டு போதப்புலம்புகிறார்
தன்னுடையதலைமயிரைத் தானும்விரித்துக்கொண்டு
மன்னவனைச்சுற்றிவந்து மாரடித்துதான்விழுந்தார்
கொற்றவனைச்சுற்றிவந்து கோவென்றழுகலுற்றார்
மலையேயபருவதமே வாட்டமில்லாக்குஞ்சரமே
செம்மலைபருவதமே உனக்குச்சேதமில்லையென்றிருந்தேன்
மாண்டுமடிந்தாயோ வைகுந்தம்போனாயோ
செத்துமடிந்தாயோ சிவலோகம்போனாயோ
மாளவோயிங்குவந்தாய் மாபாவிபட்டணத்தில்
சாகவோயிங்குவந்தாய் சண்டாளன்சீமையிலே
உன்னைப்பறிகொடுத்து ஒருத்தியாய்ப்போவேனோ
மைத்துனர்க்கென்னசொல்வேன் மாமனார்க்கென்னசொல்வேன்
மன்னவனைச்சுற்றிவந்து மாதுபுலம்பலுற்றான்
அழுதகுரலோசை ஆரணங்குகேட்டுவிட்டாள்
பவளக்கொடியாளும் பத்தினியாள்கேட்டுவிட்டாள்
ஆடலும்பாடலும் அத்தனையுங்கையார்த்தி
ஆடாதுதுவரே அடர்ந்தவனந்தனிலே
பெண்குரலாய்கேட்கிறது போய்பார்த்துவாருமென்றாள்
அழுதகுரலேது ஆராய்ந்துபார்த்துவாரும்
அப்போதுதாதியரும் அழகுள்ளமோகவதி
மோகவதியாளும் முன்னேவந்துகண்டனிட்டாள்
தாதியருமங்கேவந்து சரணமிட்டாள்மாதருக்கு
மாதரசிசெலவருள க்ஷணத்திலொருதூதுவனும்

பவளக்கொடிமாதே பத்தினியேயென் றச்சி
ஆரோவொருத்தனவ ஆளனுந்தேவியுமாய்
கதண்டுகொட்டியாண்டாரென்று கன்னியவள்சொல்லுகிறாள்
புருஷன்மடிந்துவிட்டான் பெண்ணாள்புலம்புகிறாள்
அவனை யெழுப்பிவிட்டால் அனந்தங்கோடிபுண்யமுண்டு
அவள்-ஆளனையெழுப்பிவிட்டால் அரிவையற்குமோட்சமுண்டு

பவளக்கொடியாள்வந்து காண்பது.

இந்தமொழிகேட்டு எழுந்தாள்பவளக்கன்னி
முத்துநிறப்பல்லக்கில் மொய்குழலுமேறிவந்தாள்
மாண்டவன்தன்னருகே வந்தயிரங்கினாள் காண்
அச்சுதானந்தரென்று ஐயர்புலம்புகிறார்
பெண்போல்புலம்புகிறாள் பேசும்பெருமாளும்
நான்பாருதகாடுமில்லை பணியாததீர்த்தமில்லை
மிதியாவனங்களில்லை முழுகாததீர்த்தமில்லை
தேசம்பலபலவாய் தீர்த்தங்களாடிவந்தேன்
பூமிபலபலவாய் பிரதட்சணம்செய்துவந்தேன்
பவளப்புதுமையிங்கே பார்க்கவந்தேன்மாதாவே
ஆனையின்மத்தகத்தை அறியுங்கதண்டுமிங்கே
குதிரைகளையறுக்கும் குளவியுண்டிவ்விடத்தில்
சிங்கத்தலைபிளக்குஞ் செங்குளவியென்றதுவே
அறியாமலிருந்தோம் அரும்பாளிபட்டணத்தில்
தெரியாமலிருந்தோம் செனத்துரோகபட்டணத்தில்
இப்படிவருங்கருமம் யாதொன்றுநானறியேன்
மலைபோலப்பருவதமே வாட்டமில்லாக்குஞ்சரமே
செம்மலைபருவதமே சேதமில்லாச்சுந்தரமே
கல்லான தூணேஉன்னைக் கரையானரித்ததுவோ
இரும்பான தூணேவுன்னை வளையானரித்ததுவோ
செம்பருந்து உன்னை சிறகாலடித்ததுவோ
என்று-மோதிரக்கையை முகத்தோடணைந்துகொண்டாள்
கோவென்றசத்தமுடன் குமரியழுதாற்றாள்
தரையில்பிரண்டழுதார் தாணியளந்தவரும்
பங்கயஞ்சீர்கண்ணார் பவளத்தின்கன்னியரும்
ஆரடிபெண்ணேநீ அழுதுபுலம்புவதேன்
எந்தவூரெந்ததேசம் யெங்கிருந்துயிங்குவந்தீர்
மாண்டவரார்காணும் மாதேநீசொல்லுமென்றாள்

ஸ்ரீகிருஷ்ணதேவர் சொல்வது.

பவளக்கொடியாளே பத்தினியேயென்னச்சி
ஆறுதல்கேளம்மா ஆணங்குசொல்லுகிறேன்

ஊருண்டோஎங்களுக்கு உற்றபதியுமுண்டோ
தேசம்திரிபவர்க்கு சீமைகள் பூமியுண்டோ
நாடுவடக்கேயம்மா நகரிதிருக்காஞ்சி
தேசம்வடக்கேயம்மா திருக்காஞ்சிமாநகராம்
தீவுபலதிரிந்து தீர்த்தங்களாடிவந்தோம்
பூமியொருபுரமா யெண்ணிதீர்த்தமாடிவந்தோம்
பவளப்புதுமையை பார்க்கவந்தோம்என்தாயே
மாலையிட்டுக்கொண்ட மணவாளனிவர்காணும்
தாலிதரித்துக்கொண்ட தலைவனிவர்காணும்
வாலப்பிராயமம்மா வயதுபதிறைளவே
மார்பளவாய்முகமளவாய் வந்ததுகதண்டுகளும்
மாலைமுடியானை மன்னவனைக்கொல்லுதம்மா
தாலிச்சரடிழந்து தலைவிரிகநாளாச்சோ
எங்கையோவாணம் பிடிக்குதுயெனறிருந்தேன்
தப்பாதேவாணந் தலையிலிடிந்ததம்மா
அண்ணனில்லைதம்பியில்லை ஆதரிப்பாருமில்லை
அதரியிடுவார அவனிதனிலாருமில்லை
இருவருமாய்வந்தோமே ஒருத்தினைப்போவேனோ
உனை-புண்ணியமாய்ப்போகுது பிழைக்கவகைபாருமம்மா
மங்கிலியப்பிச்சையது தருமமாமாதாவே
உனை-தருமமாய்ப்போகுதம்மா தாயேமுகம்பாரும்
என்று-புநதணையேந்தி முன்னே நின்றாளே
மடிபிச்சைதாருமென்று மடியேந்திநின்றாளே
மாரிழவுகொடுத்து மயங்கியழுதாளே
அவிந்தவிளக்கேற்றிவைத்தால் அநேகதாமமுண்டுனக்கு
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாள்கேட்டு
இந்தப்பாசாங்குகள்ளியை அப்பாலேதள்ளுங்கடி
என்று-மேகமலைபோலே மெள்ளநடந்துவந்து
அவன்காலைப்பிடித்துக் கரியமுடியசக்கி
பார்க்காளதிருமுகத்தைப் பார்த்தாள்பலகாலும்
மேலேயிருக்கின்ற முக்காட்டைவாங்கியல்லோ
உற்றுப்பார்த்தாளே ஒளிபிறந்தகண்ணாளும்
வானவர்பெண்டுகளை வலதழிக்குங்கள்ளனடி
மட்டில்லாபெண்டுகளை வகைமோசஞ்செய்தவண்டி
தேசத்துமாதர்களை சிறைபெடுக்குங்கள்ளனடி
புரட்டுங்கள்தாதிகளே பின்னழகைப்பார்ப்போமென்றாள்
தாமக்கருங்குழலாள் தாதிபுரட்டலுற்றார்
முன்னழகும்பின்னழகும் முகத்திலமச்சரேகைகளும்
தோளில்துளசிமாலை தொப்புளிலமுர்தகலசம்
பல்லிற்பரசவீணை பாதத்தில்செந்தாமரை

மீசைமுருக்கழகன் மைவிழியின் திருவழகும்
நாவிலேநட்சத்திரம் நயனவிழிபார்வைகளும்
பதினெட்டுலட்சணமும் பார்த்தாளேபதநினியாள்
தேவாதிபிண்டமடி சுவாமிக்குமைத்துனண்டி
இவனையெழுப்பினால் எனக்குவரும்மோசமென்று
பவளகொடியறுத்துப் பார்த்திபனைக்கட்டுமென்றாள்
அப்போதருச்சுனனும் ஆயனைத்தானினைந்து
வாள்விஜையனருச்சுனனும் மாயவரைத்தான்பணிந்து
எப்படியோஉன்தயவு எம்பெருமாள்மேகவர்ணா
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
ஹரிராமாமாயவரே அருகிருந்துகாருமையா
கட்டினதேயுண்டானால் கட்டவிழப்பாருமென்றான்
மனதில்நினைத்தானே வாள்விசயனருச்சுனரும்
பவளக்கொடியாலே பாங்கிமார்கட்டினார்கள்
கட்டுங்கொடிகளது கடுகவேயிற்றுதங்கே
ஆனைகட்டுஞ்சங்கிலியால் அவனையேகட்டினார்கள்
ஆயன்தயவாலே அரிராமாகிருபையினால்
அத்தையும்விம்மி அறுத்தானே அருச்சுனனும்
மார்பின்சரப்பளியை வாங்கியவள்கைகொடுத்து
கெட்டியாய்கட்டுமென்று கிட்டவந்துநின்றாளே
மாணிக்கச்சரப்பளியால் வலுத்திருக்கிக்கட்டினார்கள்
அவன்-காலையசக்குகிற கால்சேஷ்டைமெத்தவுண்டு
கையையசக்குகிற கைசேஷ்டைமெத்தவுண்டு
இங்கேயிருந்தாலே எனக்குவருமோசமென்று
பங்கயஞ்சீரகண்ணாள் பவளக்கொடியாளும்
பல்லக்கின்மீதேறி பாங்கியர்சூழ்ந்துவர
மங்கையர்கள்சூழவே வந்திரங்கினாள்மண்டபத்தில்
வாள்விசயனருச்சுனனும் மாணிக்கச்சங்கிலியின்
கட்டையவிழ்த்தவனும் கடுகவெழுந்திருந்து
அச்சுதானந்த ரையரேயென்தோழா
ஆயிரந்தோழருக்கு அரிதாகியமணியே
கண்டீரோதோழாநீ கன்னியுடலட்சணத்தை
பார்த்தீரோவென்தோழா பவளக்கொடிலட்சணத்தை
இவளுக்கொப்பானோர் யாருமில்லைவையகத்தில்
ஈஸ்வரன்தேவி ஈஸ்வரியாள்யீடுமல்ல
இராமரிடதேவி லட்சுமிஈடுமல்ல
பிரமனிடதேவி சரஸ்வதிஈடுமல்ல
ஏமனிடதேவி மோககன்னிஈடுமல்ல
தேவேந்திரன்தேவி யிரதிராணிஈடுமல்ல
சந்திரனார்தேவி ரோகணிஈடுமல்ல

சூரியனார்தேவி சாயாதேவிஈடுமல்ல
கந்தருடதேவி கனகவள்ளிஈடுமல்ல
மன்மதன்தேவி ரதிமாதுஈடுமல்ல
ஆருடைய அழகுக்கு ஒப்பிடுவேனு மங்கை
வேரிற்பவளமது மின்னுநிறகாந்திகண்டாய்
ஆயிரமின்னலிலே சோதிமின்னல்போல
கண்ணாலேபார்க்க முடியவில்லை[illegible]
எப்படிமறந்து இவளைவிட்டுநானேபோவேன்
இறப்புக்குப்பிறப்புக்கு மினியொருபெண்ணேனுமோ
இவளை-பாலைத்தரியாமல் ஒருவேதொருநாளுமில்லை
இவளாலேயென்னுயிரும் இறக்கிறதப்பாது
அச்சுதானந்த ரையருந்தான்கேட்டு
என்காணும்வாள்விஜயா யிந்தமதியுந்தனுக்கு
தோள்மாலைபோட்டதொரு தோழிமார்தங்களிலும்
பாஞ்சாலன்பெற்றபெண்ணை பத்தினியைமாலையிட்டீர்
அவளிலுமெத்த ஆரணங்கிவளழகோ
எந்தனுதங்கை சுபத்திரையைமாலையிட்டீர்
அவளிலுமெத்த ஆரணங்கிவளழகோ
அகத்தியனார்பெற்றெடுத்த அருங்கிளியாள்போகவதி
அவளிலுமெத்த ஆரணங்கிவளழகோ
மேகம்பயின்றெடுத்த மின்னொளியைமாலையிட்டீர்
அவளிலுமிவளழகோ ஆனந்தவாழ்மார்பா
அல்லியரைப்பார்க்கிலு மிச்சமுண்டோயிவளழகு
வேண்டாங்காண்வாள்விசையா வெறுத்துவிடுமிவளாசை
ஏழுலட்சந்தேவிமா ரெல்லோருந்தானிருக்க
மாதொருத்திக்காக மயங்கிவிழுவானேன
காண்டாவனமெரித்த காளையவன்கூறுவான்
நீர்-என்னதான்சொன்னாலு மென்செவியிலேறாது
மாதந்தக்கன்னியரை மணமாலைசூட்டினக்கால்
என்னுடையசீவன் யிருக்குங்காணென்தோழா
எண்ணப்படிமுடிக்க வேண்டுங்காணீஸ்வரரே
யிருவருமாகவே யிருக்கின்றவேளையிலே
பங்கயஞ்சீர்கண்ணாள்பவளக்கொடிநாயகமும்
பொழுதுசரிந்தது; போகவேணும்மாளிகைக்கு
யார்பின்சொப்பனியை மறந்துவாதாதேயென்றான்
அப்போதுதாதிமார் அதிதுரிதமாகவந்து
ஆர்காணுமன்னவனே அழகானஐயாவே
ஆச்சிபார்கட்டிவைத்த அழகுசொப்பனியை
கட்டிவைத்துப்போனதை கடுகவேதாருமென்றாள்
பொழுதுசரிந்தது போறாளரண்மனைக்கு

மார்பின்சரப்பளியை மன்னுகொடுத்திடென்றாள்
திட்டென்றெழுந்திருந்து தேர்விசையனேதுரைப்பான்
உங்கள்-அலங்கங்களேறி குதித்தேனேடி ஆரணங்கே
கோட்டைகளேறி குதித்தேனேடிகொம்பனையே
அரண்மனையேறி குதித்தனேடி ஆரணங்கே
மேலேகுதித்தேனே பவளநல்லாள்கோட்டையிலே
பெட்டியெடுத்தேனே பொக்கிஷந்திருடினேனே
மாதவள்கையை வலியவந்துதொட்டேனே
கள்ளன் திருடனைப்போல் கன்னமிட்டுபோனேனே
என்னகுற்றஞ்செய்தேன் என்னையவள் தானும்
கட்டழகிமாதவளுங் கட்டிவைத்துப்போனாளோ
கள்ளனைப்போலாகக் கட்டவும்நியாயமுண்டோ
திருடர்களைப்போலச் சேர்த்துகட்டநியாயமுண்டோ
கட்டினால்தீருமோ கன்னியவளாசை
கட்டிவைத்தமாதென்னைக் காட்டில்விட்டுபோகலாமோ
கூடவழைத்தல்லவோ போகவேணுங்கொம்பனையாள்
அரண்பனைக்குளென்னை அழைத்துப்போகலாகாதோ
என்னசுதந்திரத்தில் உன்னையவள்கட்டிவைத்தாள்
அம்மான்மகளென்று அன்பாகக்கட்டினாளோ
அத்தைமகனென்று ஆசையாய்க்கட்டினாளோ
அழகானகன்னியென்று மணமாலைசூட்டினேனே
வடிவானகன்னியென்று வாழ்மணஞ்செய்தேனே
என்னசுதந்தரத்தால் என்னையவள்கட்டிவைத்தாள்
கையிலகப்பட்டதை விடுவேனோகன்னியரே
மார்பின்சரப்பளியை மாதேகொடுக்கேண்டி
வலியவந்தபாக்கியத்தை விடுவேனோகன்னியரே
சண்டையதுவேண்டுமென்றால் சரியாகவாரேண்டி
அவளுக்குஅஞ்சுவனோ ஆனந்தவாழ்மார்பன்
என்றதுகேட்டு ஏதுசொல்வாள் தாதியவள்
உந்தனுக்குசெய்த உபகாரமத்தனையும்
வேங்கைக்குச்செய்த விஷதாரியாச்சுதடா
மாண்டிடத்துமாண்டு மண்ணுளுத்துப்போகாமல்
எழுப்பிவிட்டதோஷமடா இத்தனையும்பேசுகிறாய்
ஆகடியம்பேசதற்கு அடுக்குமோஉந்தனுக்கு
என்றதுசொல்லியே நடந்தாளிளங்கொடியாள்
வாயுவேகமாகவேதான் வந்தாளேமண்டபத்தில்
பவளக்கொடிமாதின் பாதத்தில்தெண்டனிட்டு
கைகட்டிவாய்புதைத்து கன்னியருமேதுரைப்பாள்
மார்பின்சரப்பளியை மன்னவனைபோய்கேட்டேன்
அன்னென்றுசொல்லி யிடிவிழுவான்சொன்னதெல்லாம்

பொழுதுசரிந்தது போகிறோமரண்மனைக்கி
மார்பின்சரப்பளியை மன்னவனே தாருமென்றேன்
அவன்-வம்பானவார்த்தைகளு மிடும்பானபேச்சுகளும்
ஈடழிவான்சொன்னசொல் ஏதென்றுநானுரைப்பேன்
என்றுசொல்லதாதியர்கள் ஏதுசொல் ாள்பவளக்கன்னி
அப்போதேசொன்னேன் தப்புவருமென்றுசொல்லி
அவனையெழுப்புவது ஆகாதுயென்றுசொன்னேன்
நமக்குவினையாச்சே நாம்சொன்னசொல்மெய்யாச்சே
எந்தன்சரப்பளி போனாலும்போகட்டும்
மாளிகைக்குப்போவோம் மாதேபயணமிட்டு
என்றவள்சொன்னவுடன் இளவிசயனருச்சுனனும்
அச்சுதானந்த ரையர்முகம்நோக்கி
என்னவடிவுநான் எடுக்கவென்றாயென்தோழா
அன்னத்தின்மேலே ஆசையுண்டுமாதருக்கு
நீர்-வேடனைப்போலாக வேஷமெடுங்காணும்
என்னைவிலைகூறியே எடுத்துப்போஏந்திழைமுன்
பார்த்தாசைப்பட்டல்லோ பரிந்துவிலைகேட்பாள்
ஆயிரம்பொன்னென்றுசொல்லி அவள்கையிலேநீகொடும்
ஊருக்குநேர்கிழக்கே விநாயகர்கோவிலண்டை
அங்கேபோய்நீரிருங்காண் அச்சுதரேநான்வாரேன்
என்று-மாயன்பெருமாளை மனதிலேதானினைத்து
ஆயன்பெருமாளை அப்போநினைத்தானே
எம்பெருமாள்மேகவர்ணா யேழுலகளந்தமாயா
முட்டையின்குஞ்சை முகமறியாப்பாலகனை
பிட்டுவளர்த்தீரே பிரபலியமாகவென்று
மூக்காலேமுள்பொருக்கி முழுமரத்தில்கூடுகட்டி
காக்கையின்குஞ்சுகளை கருதிவளர்த்தீரே
உன்னையேநம்பி வுயிர்கொண்டுலாவுகிறேன்
பவளக்கொடியைநான் மணமாலைசூட்டுகிறேன்
அன்னவடிவாக ஆண்டவனேநீர்கொடென்றார்

## ஸ்ரீகிருஷ்ணதேவர் அருச்சனனுக்கு அன்னவடிவுகொடுத்தல்.

அருச்சுனன் தானினைக்க ஆயனதுவரிந்து
அன்னவடிவாக ஆயன்வரங்கொடுத்தார்
ஆனாலழகுமன்னன் அன்னத்தைப்போலானான்
செட்டையழகென்ன சீருடையநெற்றியென்ன
காலினழகென்ன காதுமடியழகென்ன
மூக்கினழகென்ன மூனைமயிரும்பாவனையும்
கூவுங்குரலழகும் குயிலோசைபோலிருக்கும்
அருச்சுனராசனவன் அன்னவடிவானான்



ஸ்ரீகிருஷ்ணர் அர்ச்சுனனுக்கு அன்னவடிவு கொடுத்தல்.

## ஸ்ரீகிருஷ்ணதேவர் வேடவுருவெடுத்தல்.

அச்சுதானந்த ரையர்பெருமாளும்
காட்டுக்கிழங்கெடுக்குங் கனவேடன்போலானார்
கால்செருப்புந்தோல்துல்லாவும் கைதனிலேமான்வலையும்
பன்றிகுத்துஞ்சல்லயமும் பாரிசமுங்கைபிடித்து
கோட்டையிட்டதுப்பாக்கி குண்டுகுழல்கைபிடித்து
கருநாயுஞ்சங்கிலியும் கைதனிலேதான்பிடித்து
அன்னத்தையேந்திக்கொண்டு அவன்வாரான் கானகத்தில்
பவளக்கொடியாள் பத்தினியாள் தானிருக்கும்
மண்டபத்துவழியாக வருகிறான் வேடனவன்
ஆரணங்குதோழிமார் அன்னத்தைத்தான்பார்த்து
ஆடாவேடுவனே அன்னத்தைவிற்கிறவன்
விற்கிறையோநீசொல் வேண்டியபொன் தாறேனென்றாள்
அப்படியேநல்லதென்று அழகுள்ளவேடன்சொல்ல
ஓடிவந்தார்கள் உத்தமிமுன் தாதியர்கள்
ஆரோஒருவேடன் அன்னத்தைவிற்கவந்தான்
அன்னத்தைப்பார்த்தாலே அழகாயிருக்குதம்மா
கண்ணிட்டுப்பார்க்க காணமுடியாது
வைத்துவளர்க்கலாம் வாங்குமம்மா ஆச்சியென்றாள்
அவ்வார்த்தைத்தான்கேட்டு அன்னநடைமாது
அந்தநல்லவேடுவனே அழைத்தோடிவாருமென்றாள்
ஓடினாள் தாதியரும் ஒருநொடியில்வேடனண்டை
ஆடாவேடுவனே ஆச்சியழைக்கிறாள்
அன்னத்தைகொண்டுவாடா அழகுள்ளவேடுவனே
என்றதுசொல்லையிலே அசைந்துவழிநடந்து
பவளக்கொடியாள் பத்தினியாள்முன்னேவந்தான்
கண்டாள்பவளநல்லாள் கட்டழகியன்னமதை
என்னப்பாவேடுவனே என்னவிலைசொல்லுமென்றாள்
ஆயிரம்பொன்கொடுத்தால் அன்னம்தருவேனென்றான்
அன்னத்தைவாங்கி அழகாய்மடியில்வைத்தாள்
மூக்கினாலருச்சுனனு முலைமார்பில்குத்தலுற்றான்
மார்பின்ஸ்தனத்தையவன் வாயால்பிடித்திழுப்பான்
முகத்தோடேமுகமணைப்பான் முத்தங்கொடுத்திடுவான்
பவளக்கொடியாளும் பத்தினியேதுசொல்வாள்
என்னயாவேடுவனே இப்படிமேல்விழுகிறது
ஆயிழையாள் தங்கை அவள்வளர்த்த அன்னமிது
பெண்டுகளென்றால் பிரியமாய்மேல்விழுமே
ஆசையாய்முத்தமிட்டு அணைத்துவிளையாடும்
சீருய்வளர்த்ததென்று சொல்லிவழிநடந்தான்
அன்னமெப்போவுந்தோதா இரைகொடுத்துதோ

மஞ்சமலங்கரித்து மண்டபத்துசங்கிலியால்
வைத்திழுத்துகட்டினார்கள் மன்னவாருச்சுனனை
பவளக்கொடியாளுடைய பஞ்சணையின்மேலாக
நற்பவளத்தூணருகில் நலமாகக்கட்டினார்கள்
பவளக்கொடியாளும் பத்தினியாளப்போது
தீர்த்தங்கள்வாங்கியே திருவாய்முகங்கழுவி
போசனங்களுண்டு பொடியள்ளிகைதுலட்டி
பஞ்சணைமெத்தை படுக்கையறைமேசோடியென்றாள்
கடுகயெழுந்தார்கள் கட்டழகிதாதியர்கள்
கண்மூன்றுடைய கனவயிரக்கட்டிலிட்டு
மெத்தைமடித்திட்டு மேலேயணைகோலி
காம்பரிந்தஐங்கலப்பூ கட்டிலின்மேல்பரப்பி
கால்கோட்டைகைகோட்டை இட்டந்தகாரிவைழக்கு
ஒருகுதலைக்காணி ஒய்யாரபஞ்சணையாம்
தங்கத்தலைக்காணி சகலாத்துதழுவணையும்
அன்னவுஞ்சல்மேலே அழகாகசோடித்தார்
அத்தர்புனுகுகளை அள்ளித்தெளித்தார்கள்
கதம்பகஸ்தூரிகளைக் கரைத்துதெளித்தார்கள்
சந்தனமுங்குங்குமமுஞ் சவ்வாதுதான்தெளித்து
சாம்பிராணிவாடைகளும் சந்தனப்புகைகொடுத்தார்
பஞ்சணைமெத்தையண்டை தம்பலவட்டில்வைத்தார்
காச்சாக்களிப்பாக்கும் கம்மாறுவெற்றிலையும்
ஆரங்கிபாக்குகளு மோரங்கிவெற்றிலையும்
வாகாயிலைச்சுருளும் வாஸத்துவர்பாக்கும்
கொத்துதுவர்பாக்கும் கோவையிலைச்சுருளும்
முத்துசுட்டசுண்ணாம்பு மொய்குழற்குவைத்தார்கள்
கெண்டியில்நீருங் கொண்டுவந்துவைத்தார்கள்
குத்துவிளக்கு குடவிளக்குமேத்திவைத்தார்
மாடவிளக்கு மயில்விளக்குமேத்திவைத்தார்
ஆயிரம்பெருவிளக்கு வாசலிலேற்றிவைப்பார்
சோடித்தோமென்றுசொல்லித் தேன்மொழிமார்தெண்டனிட்டார்
அப்போ-பவளக்கொடியாளும் பத்தினியாள்தானெழுந்து
வாசல்பதினெட்டுங் காக்கிறதாதியர்கள்
பத்திரங்காவலென்று பஞ்சணையிற்போயிருந்தாள்
காயாரக்காய்த்த கமுகினிளம்பாக்கை
வாயாரத்தின்றவளும் மலரணையிற்பள்ளிகொண்டாள்
நிமிசாபெரியலகு கேரிசமாம்பெரியசத்தி
மந்திரவாளுருவி மார்மேலேசாத்திக்கொண்டாள்
பவளக்கொடியாளும் பள்ளிகொண்டாளப்போது
அங்கங்கேதாதியர்கள் ஆனவோரும்பள்ளிகொண்டார்

## அருச்சுனன் அன்னமாடிவைவிட்டு தன்சுபரூபமாகுதல்.

அனந்தலநெடுநாழி சென்றபிறகாக
ஆணழகனருச்சுனனும் ஆபனைக்காலினைந்து
மாயனபெருமாளை மனதிலேதானினைந்து
கூட்டைத்திறந்தவனும் கொபமெனவேரூபமானான்
அன்னவடிவைவிட்டு ஆண்ரூபமானானே
பொல்லாதகாதல் புலம்புகுதுகௌளியது
வஞ்சுரவில்பல்லியது வலப்புமாய்சொல்லுதது
எழுப்பியகாதலும் எண்ணியவள்பார்த்தளவில்
ஆள்வருத்தாகவே சொல்லுகுது இக்கெவுளி
அடுத்தடுத்துசொல்லுவதும் ஆள்வருத்தாய்காணுகுது
இத்தனைநாளாக இல்லாதகெவுளியது
ஒருநாளுஞ்சொல்லாத வுச்சிதமாய்சொல்லுகுது
காட்டிலிருந்தவர்கள் கள்ளரோநானறியேன்
ஆயாசபட்டவளும் அழுதாற்போலேயிருந்தாள்
பின்னுமரைநாழி பொறுத்தபிறகாக
பொல்லாதகாதல் எழும்பிற்றுபொற்கொடிக்கு
எழுப்பியகாதலை எண்ணியவள்பார்ப்பளவில்
அடுத்தடுத்துச்சொல்லுவதும் ஆள்வருக்தாய்காணுவதும்
எண்ணிமனங்கலங்கி இளங்கொடியாளேதுசொல்வாள்
ஆடிதாதிகளே அலங்காரச்செங்கமலம்
பஞ்சணைமேலாக பாங்கியரேபள்ளிகொண்டாள்
ஒருநாளுஞ்சொல்லாத வுச்சிதக்கெவுளியது
வலப்புறத்துப்பல்லி வலப்புறமாய்சொல்லுதடி
கெவுளியின்சாஸ்த்திரத்தை ஆராய்ந்துபாரடிநீ
என்றதுகேட்டவுடன் இளங்கொடியாள் தாதியர்கள்
அவளறிந்தசாஸ்திரத்தை ஆராய்ந்துபார்க்கலுற்றாள்
ஆள்வருத்தாய்காணுகுது ஆச்சியரேஎன்னசொல்வேன்
ஆரோதெரியாது ஆள்வருத்தாய்காணுகுது
அவ்வார்த்தைகேட்டுமவ ளாரணங்கேதுரைப்பாள்
வாசல்பதினெட்டு காத்திருக்குமந்திரிகள்
பத்திரமாகவே காத்திருங்கள்பைங்கிளியே
எச்சரிக்கையாகவே இருங்களடிகாவல்
தப்பிதமுண்டானால் தலைவைதரித்திடுவேன்
காவலுடையவற்கு கட்டுதிட்டம்பண்ணினாள்
பவளக்கொடியாள் பத்தினியாள்சொற்படிக்கு
பதினெட்டுவாசலுள்ளோர் பத்திரமாய்க்காக்கலுற்றார்
அன்னவுஞ்சல்மேலாக ஆரணங்குபள்ளிகொண்டார்
பின்னுமொருநாழி பொறுத்தபிறகாக

காண்டாவனமெரித்த காளையெழுந்திருந்து
எப்படிக்கு இவளுடனே இணங்கியுருவிடுவேன்
என்றுமுச்சையைபிடித்தவனும் விளக்கையணைத்துவிட்டான்
கொய்யபன்னையாள்மெத்தையிலே மணிகளசைந்ததுகாண்
பொட்டெனவேகண்சிவந்து பார்த்தாளேபொற்கொடியும்
மந்திரவாளாலே வீசினாள்மாதுகன்னி
முன்லாகையாகாமல் பின்லாகையாய்க்குதித்தான்
நற்பவளத்தூணு நடுவாகயிற்றுதங்கே
வெட்டவிழுந்தது வீரமணிவாளாலே
பவளக்கொடியாளும் பத்தினியாளேதுசொல்வாள்
வானவர்களானாக்கால் என்வாள்முனைக்குதப்பிடுவார்
மனுஷரூபமானாக்கால் மாண்டிடித்திடுவார்
என்றதுசொல்லி இளங்கொடியாள் தான்பார்த்தாள்
பின்னுமொருநாழி பொருத்தபிறகாக
ஆனந்தமார்பனவன் அருச்சுனராசதுரை
நித்திரைவேளையோ ராசர்உரக்கமோ
மஞ்சத்தைதான்பிடித்து மன்னனசைத்துவிட்டான்
அரைவடமுங்கிண்கிணியு மணிகளசைந்ததுகாண்
வேல்பொருதுங்கண்ணாளும் வீசலுற்றாளந்நேரம்
வீசினவாளுக்கு வேந்தனருச்சுனனும்
முன்லாகையாகாமல் பின்லாகையால்குதித்தார்
நற்பவளத்தூணு நடுவாகயிற்றதுகாண்
கண்விழித்துப்பார்த்தாளே கட்டழகிமாதுகன்னி
காட்டிலிருந்த கள்ளன்திருடனோ
வானவர்கள்தேவரிங்கு வந்தாரோநானறியேன்
மஞ்சம்புரளுவதேன் மணிகளசைவானேன்
வானவர்கள்தேவரென்றால் என்வாள்முனைக்குதப்பிடுவார்
ஆண்ரூபமானால் அவர்பிழைக்கப்போறதில்லை
ஏறெடுத்துப்பார்த்தாளே இளங்கொடியாளருச்சுனனை
மன்னன்முதுகிலே மச்சரேகைகண்டாளே
அப்போவிசையன் அருச்சுனனுமேதுரைப்பான்
உன்வாசலுக்குவானவர்கள் தேவரும்வாராரோ
நான்-தேவாதிபிண்டமடி தோவிசையனர்ச்சுனண்டி
பேர்பெற்றுடைய பெருமாளுடமைத்துனண்டி
மாயன்பெருமாளுக்கு மைத்துனன்நான்தாண்டி
என்று-பல்லொளியைக்காட்டினான் பவளக்கொடியாளுக்கு
சோர்ந்துதியங்கியவள் சொரணைதப்பிகீழ்விழுந்தாள்
ஆனலமுதுமன்னன் அர்ச்சுனன்தானெழுந்து
சாயமணிக்கவுரி சந்தனத்தாலுதுவத்தி

வீசினான் களைதெளிய வெண்சாமரைக்கவரி
கற்பழியாகன்னியரும் கற்பழிந்துபோனாளே
கற்பழிந்துபோனேனென்று கன்னிபுலம்புகிறாள்
அப்போவிசையன் அருச்சுனனுமேதுசொல்வார்
நீதானோகற்பழிந்தாய் நேரிழைநாயகமே
கற்பழிந்தமாதர்களை கன்னியரேசொல்லுகிறேன்
தீயிற்பிறந்தவளும் தென்னாட்டான்பாவையரும்
மேனகம்பயின்றெடுத்த மின்னொளிநாயகமும்
பார்மண்டலமாளும் பார்ப்பான்மடந்தையரும்
நாகம்பயின்றெடுத்த நறுநுதலாள் கன்னியரும்
அச்சுதன்தங்கையவள் ஆரணங்குசுபத்திரையாள்
மருடத்துரைச்சிபவள வாழ்வரசிபவளியரும்
நான்-கற்பழித்தமாதர்கள் கணக்குமிதங்களில்லை
என்றதுகேட்டு இளங்கொடியாளேதுசொல்வாள்
எத்தேசகாலமும் அதுவேதொழில்தானோ
எப்போதுமெந்தனுக்கு இதுவேதொழில்தானடி
குருகுலவம்மிஷத்தில் குந்திவயிற்றிலே
ஐவருடன்பிறந்தேனைந்தகாம்பார்பன்
அவனிமுழுதும் ஆளுகிறார் தருமலிங்கம்
நான்-தேவிகளைக்கொள்ளுகிறதுஞ் செல்வரைப்பெருகிறதும்
இதுவேதொழிலாக இருக்கிறேனேந்திழையே
மன்னவருந்தேவியரும் மனதுவறவாணபினைபு
உன்மேல்மயலாகி உள்ளமுருகுதடி
அன்னவடிவுதான் கொண்டேனே ஆரணங்கே
வே ஞர்கைதனிலே விலையாகக்கண்டாயே
அதினாலுஞ்சாடை யறியாமற்போனாயடி
என்-மூக்கினாலுன்மார்பை குத்தினேன்மங்கையரே
உன்-மார்ச்சதையைக்குத்தி வலித்தேனடிமங்கையரே
அத்தாலுஞ்சாடை யறியாமற்போனாயடி
ஆளனுந்தேவியுமாய் அக்காட்டில்நானிருந்தேன்
கதண்டுகொட்டிசெத்தவனைப் போலாகநானிருந்தேன்
பவளக்கொடியருத்து கட்டிவைத்தாய்பத்தினியே
கட்டுக்கொடியை யறுத்தேனடிமங்கையரே
அத்தாலுஞ்சாடை யறியாமற்போனாயடி
ஆளைகட்டுஞ்சங்கிலியா லாரணங்கேகட்டிவைத்தாய்
சங்கிலியைநானறுத்துப் போட்டேனேதையலரே
அத்தாலுஞ்சாடை யறியாமற்போனாயடி
உன்-மார்பின்சரப்பளியால் வரிந்தென்னைக்கட்டிவைத்தாய்
உன்-தாதியரைநீயனுப்பி வாங்கிவரச்சொன்னாயே
சொல்லாதவார்த்தையெல்லாஞ் சொல்லியனுப்பினேனடி

உன்னை-திட்டியனுப்பினண்டி தீங்காகச்சொன்னேனண்டி
அத்தானுஞ்சாடை யறியாமற்போனையடி
அன்னவடிவு எடுத்தேனே ஆரணங்கே
வேடனூர்கொண்டுவர விலைகொடுத்துவாங்கினையே
உன்-முத்துஸ்தனத்தைநான் குத்திவலித்தேனே
மார்பின்சதைதனைய வலித்தேனடிதையலரே
அத்தானுஞ்சாடை யறியாமற்போனையடி
வேடனைப்போலாக வந்தவனுமென்தோழன்
அன்னத்தைக்கொண்டுவந்து அரண்மனையிற்கட்டிவைத்து
பவளக்கால்மண்டபத்தில் பத்தினியேகட்டிவைத்தாய்
அன்னவடிவைவிட்டு ஆள்ரூபமானேனண்டி
பஞ்சணைமெத்தையை அசைத்தேன்மணியசைய
அத்தானுஞ்சாடை யறியாமற்போனையடி
உனக்கே-அழகேபெரிதுகண்டாய் ஆண்மைகள்போதாது
மகுடத்துரைச்சியவள் வாழ்வரசியல்லிநல்லாள்
அல்லியவளுடைய ஆண்மையுனக்கில்லையடி
இவையெல்லாஞ்சொல்லியே சிரித்தானிளவிசையன்
பவளக்கொடிமாது பத்தினியாளேதுசொல்வாள்
தோழருநீருமாய் வந்தேனென்றீர்சுந்தரரே
அருகேவந்ததோழரவர் ஆணழகரெங்கேயென்றாள்
ஊருக்கு அப்பாலே பிள்ளையார்கோவிலண்டை
பிள்ளையாரகோவிலண்டை யிருக்கிறாரென்தோழர்
அவரையழைத்துவர ஆணழகாதோழரைத்தான்

## பவளக்கொடியாள் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியை யழைத்துவர அர்ச்சுனராசனை யனுப்புதல்.

என்றதுகேட்டு இளவிசயனேதுசொல்வான்
எந்தவழியாக இளங்கொடியேநான்போவேன்
சுரங்கத்துக்குள்ளாகச் சுருக்காய்நடவுமென்றாள்
அப்படியேநல்லதென்று அர்ச்சுனனுந்தானெழுந்து
சுரங்கத்துக்குள்ளாக சுருக்காய்நடந்தானே
கோட்டைகடந்தானே கொத்தளமுந்தான்கடந்து
பிள்ளையார்கோவிலண்டை போரானேவாள்விசையன்

## ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி அர்ச்சுனராசனை நினைத்துப்புலம்பல்.

அச்சுதானந்தரையர்புலம்புகிறார்
ஆருயிர்தோழனே அர்ச்சுனனேயென்னசெய்வேன்
உன-அண்ணர்தருமராயரும் அனுப்பினாரென்பிறகே
இருவருமாகவே இருந்தோமேதீவுதனில்
உன்னையிழந்துநான் ஊர்வழியேபோவேனோ
மாதர்மேலாசையை மயக்கமெடுத்தீரே

அவனை-கூடிடணையிலே காவலர்கண்டாரோ
பார்த்தர்பெருமானே வஞ்சகட்டறிவேனே
நீ-கட்டிடணையிலே காவலர்கண்டாரோ
உன்னைக்-கட்டிப்பிடித்தாரோ சாவிலேவைத்தாரோ
அவனைக்-கூடிபெழுந்திருக்க சோடிபோர்வந்தாரோ
வெட்டியெறிந்தாரோ வீரமணிவாளாலே
உத்தபவீரியனை உயிர்க்கழுவில்வைத்தாரோ
நீ-மாண்டுபடிந்தாயோ உன்வயிரமுடிசிந்தினதோ
மன்னர்பெருமானுக்கு வாட்டங்களுண்டானல்
சந்தனவடிவழகா தர்மருக்கேதுசொல்வேன்
வெற்றிமதயானை வீமருக்கென்னசொல்வேன்
நால்யுகுந்த யிரட்டையருக்கென்னசொல்வேன்
தோராவடிவழகி துரோபதைக்கென்னசொல்வேன்
மந்தாரக்குந்திபற்கு மாதாவுக்கென்னசொல்வேன்
அவர்-அங்கேபிழையாரே ஆணழகாவென்னசொல்வேன்
காணவும்போரேனோ காண்டீபங்கொண்டவனே
பாண்டிப்பெருமானை பார்க்கவும்போரேனோ
என்றுசொல்லிமாயவரும் ஏங்கிப்புலம்பலுற்றார்
அந்தசமயத்திலே அங்குவந்தான்வாள்விசையன்
ஏன்காணுமச்சுதரே ஏங்கிப்புலம்புகிறீர்
என்சமர்த்துகளும்சேவகமும் தாழ்வாகப்போறதில்லை
எந்தவிதத்தாலும் ஈடழித்துநான்வருவேன்
என்றதுகேட்டப்போ ஏதுசொல்வார்மாயவரும்
என்னவடிவாக யிருந்தீரவளுடனே
அன்னவடிவாக அவளுடனேசேர்ந்தீரோ
ஆள்ரூபமாகி அருங்கிளியைச்சேர்ந்தீரோ
மனிதரூபமாகி மாதரைச்சேர்ந்தீரோ
என்னவடிவாக யிருந்தீரவளுடனே

### அருச்சுனன் பவளக்கொடியாள் சேதியைச்சொல்லல்.

என்றதுகேட்டுமப்போ இளவிசையனேதுசொல்வேன்
அல்லகாணச்சுதரே ஐயாபெருமானே
அன்னவடிவாக இருந்தேனவளிடத்தில்
பவளக்கால்தூணிலே பத்தினியுங்கட்டிவைத்தாள்
பஞ்சணைமெத்தையிலே பள்ளிக்கொண்டாள்பத்தினியும்
அர்த்தராத்திரிவேளையிலே நானெழுந்தேனச்சுதரே
அவள்-நித்திரைசோதித்து நினைவறியேனுமென்று
அன்னவுஞ்சல்தன்னைநானசைத்துவிட்டேனப்பொழுது
அசைத்துவிட்டேனப்பொழுது அவள்கையிலேவாளுருவி
முன்னாலாகையாகாமல் பின்னாலாகையாலுருவித்தன்
மனிதரூபமானக்கால் வாள்முனைக்குதப்பார்கள்

தெய்வரூபமானுக்கால் திரும்பிப்பிழைத்திடுவார்
வந்தவராரென்று வாய்மொழியைக்கேட்கலுற்றாள்
நான்-தேவாதிபிண்டமடி தேர்விசையனருச்சுனண்டி
பேருல்புகழ்பெற்ற பெருமாளவர்மைத்துனண்டி
மாயன்மெருமானுக்கு மைத்துனன்நான்தாண்டி
இவ்வார்த்தைநானசொன்னே னிளங்கொடியாள்மாதருக்கு
பல்லொளியைநான்காட்டிப் பார்த்துநகைத்திட்டேன்
கண்டுமயங்கிவிட்டாள் கட்டழகி கன்னியவள்
கோபித்துநான் கனைத்தான் தோகையிளங்கொடியும்
கூடிமருவினேன் குங்குமச்சாலையிலே
மருவிப்பிறிந்தேன் மாதருறவானேனே
உம்மையழையுமென உத்தாரப்பண்ணிவிட்டாள்
அவள்-மாளிகைக்குப்போக வாருங்காணச்சுதரே
அப்படியேயர்ச்சுனரும் ஆணழகிருவருமாய்
கல்லடந்தான்தொடுத்து கட்டிவருந்திகட்டி
கட்டியின்மேலொட்டியாணம் சதுராய்வரிந்துகட்டி
முத்திணருமாலை முகமிலங்கக்கட்டினார்கள்
சட்டைதமானுகளும் தரித்தாரமுதபெற
பொன்முத்தும்பட்டாடை போத்தினார்மேலாக
அப்போதருச்சுனனும் ஆணழகனேதுசொல்வான்
அச்சுதானந்த ரையரேயென்தோழா
சரப்பளியும்பொன்மூட்டையும் எடுத்துக்கொண்டுவாருமென்றார்
அப்படியேயச்சுதரும் அழகுமூட்டைதானெடுத்து
இருவருமாகவே இசைந்துவழிநடந்தார்
சூங்குத்துவழியாக துருசாகப்போய்நடந்தார்
பவளக்கொடியாள் பத்தினியாள்கோட்டையிலே
உள்வாசல்போய்நடந்தார் உத்தமவீரியர்கள்
அவள்-சிங்காதனத்துக்கு முன்பாகவந்துநின்றார்
வந்தவரைக்கண்டாளே மாதுயிளங்கொடியும்
பத்தியுடன்புத்தியுடன் பதஞ்சாணமென்றாள்
கொண்டுவந்தமூட்டையைக் கொற்றவனார்கீழவைத்து
கொம்பனைக்கெதிரேவந்து கொற்றவர்கள்தானமர்ந்தார்
பங்கபஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளும்
அப்போ-வேல்பொருதுங்கண்ணாளும் வேந்தர்களைத்தான்பார்த்து
உங்களிருவருக்கும் இதுவேதொழில்தானோ
எங்களிருவருக்கும் இதுவேதொழில்தானென்றார்
மூட்டையென்னவென்றுசொல்லிக் கேட்டாளிளங்கொடியும்
அப்போ-அச்சுதானந்த ரையருமேதுசொல்வார்
அர்ச்சுனர்முகனுமேல அன்னவடிவெடுத்து
உன்கொலுமுகச்சாவடியில் கொம்பனையேமுன்னேவந்து

கடுகச்சமையலிட்டாள் கன்னியிளமயிலும்
ஆச்சுதுபோசனங்கள் அமுதுண்ணவாங்களென்று
பாளையும்இலையும் பக்குவமாய்கைகொடுத்தாள்
தீர்த்தநீர்வாங்கி திருமுகஞ்சுத்திசெய்து
வசந்தநீர்வாங்கி மதிமுகஞ்சுத்திசெய்து
பூசைபண்ணுமண்டபத்தில் புண்ணியர்கள்வந்துநின்று
வாழையிலைபோலே வழித்திட்டார்வெண்ணீறு
கோவையிலைபோலே குழைத்தார்வெண்ணீறு
பூசைமுடித்து புகழ்வேந்தர்வீரியரும்
போசனமண்டபத்தில் புண்ணியர்கள்வந்திருந்தார்
வட்டமணைபோட்டாள் வந்தவர்களிருவருக்கும்
வட்டமணைமீது வந்தமர்ந்தாரிருவருமாய்
வாழையிலைபோட்டு வட்டித்தாள்சாதமது
சுத்திகரியும்வைத்தாள் தோகையிளங்கொடியாள்
அள்ளிபருப்பையிட்டா ளதுகண்டுநெய்வார்த்தாள்
குளிர்ந்தசலம்வெந்நீரும் கச்சாயங்கனிவர்க்கம்
இத்தனையும்தான்படைத்து ஏந்திழையாளப்போது
உண்ணுங்களென்று உபசணைசெய்யலுற்றாள்
போசனங்களுண்டு பொடியிட்டுகைதுடைத்து
சிங்காதனத்திலே தேர்விசையன்வீற்றிருந்தான்
காச்சாக்களிபாக்கும் கம்மாறும்வெற்றிலையும்
ஆரங்கிபாக்குகளும் மோரங்கிவெற்றிலையும்
அள்ளிக்கொடுத்தாளே ஆரணங்குயிருவருக்கும்
பவளக்கொடிமாது பத்தினிபாளேதுரைப்பாள்
ஆயரே அச்சுதரே அண்ணாவேநீர்கேளும்
சேரும்புராசாக்கள் செய்தபெருந்தவத்தால்
பவளக்கொடிமேலே பத்தினியாள்பெண்பிறந்தேன்
பதினாறுவருஷமாய் பட்டமரசாண்டேன்
கொள்ளவருவார்கள் கோடானகோடியுண்டு
மாலையிடவருவார்கள் வர்ணலட்சங்கோடியுண்டு
நான்-மாலைதரியாமல் மணமாலைசூட்டாமல்
நித்யகன்னியாகவே யிருந்தேனிந்நாள்வரைக்கும்
அருச்சுனராலே யழிந்துதேயென்தவங்கள்
பத்தினிசாபமது பாழாய்முடிந்துதே
எந்தன்விதிப்பயனை ஏதென்றெடுத்துரைப்பேன்
கதியைத்துலைக்கவல்லேன் காவேரிநீந்தவல்லேன்
என்விதியைத்துலைக்குகைக்கு வெல்லவகையறியேன்
சேரும்புராசருக்கு தேன்மொழியாளென்னசொல்வேன்
இப்படியாக யிளங்கொடியாள்தான்புலம்ப

அச்சுதானந்தரும் ஆரணங்கைத்தான்பார்த்து
என்னென்றுசொல்லி எடுத்துரைப்பார்மங்கையர்க்கு

## ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி பவளக்கொடியாளுக்கு கனவுசொல்லுதல்.

பவளக்கொடிமாது பத்தினியென்னுச்சி
என்னைப்பிறப்பித்த ஈஸ்வரனுமீஸ்வரியும்
அக்கினியாத்துக்கு கருகாகவேவந்து
சூலமொருகையிலே கபாலமொருகையிலே
மானுமொருகையிலே மழுவுமொருகையிலே
விரித்தசடையும் வெண்புலித்தோலாசனமும்
பக்கம்கொலுவிருக்கும் பார்வதிநாயகமும்
கங்காபவானியருங் கவுரிதரித்தவனும்
திருக்கண்ணுடையவருந் திருநீறுதானணிந்து
வெள்ளைரிஷபமேறி வித்தகரும்வந்தார்கள்
நான்-கண்டுபயந்து கடுகசரணமிட்டேன்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடிமாதே
சேராம்புராஜாக்கள் செய்ததவத்தாலே
பவளக்கொடிமேலே பாலகியையுண்டுபண்ணேன்
பதினாறுபிராயமட்டும் பட்டம்தரிப்பித்தேன்
நாளை-மத்தியானவேளையிலே மாலைதரிக்கவேணும்
மாலைதரியாமல் மணமாலைசூட்டாமல்
இருந்தீரேயாமாகில் எரித்திடுவேன்பட்டணத்தை
பட்டணத்தைநீறாக்கிப் பதியைக்கொளுத்திடுவேன்
மெய்யாகக்கண்டேன் விழித்தேன்கனவாச்சு
இப்படிக்குக்கண்டேனென்று ஏந்திழையேசொல்லுமென்றார்
அப்படிக்குச்சமதித்தா ளாரணங்குமப்போது
போய்வாருமென்றுசொன்னார் புண்ணியரிருவருமாய்
அப்படியேநல்லதென்றாள் ஆரணங்குபவளக்கொடி
அவ்வார்த்தைதான்கேட்டு அர்ச்சுனனுமாயவரும்
சுரங்கத்துக்குள்ளாக அரிசாய்நடந்துவந்து
சுரங்கத்தைவிட்டு வடகோடிகானகத்தில்
தட்டைபிள்ளையார்கோவிலண்டை வுத்தமர்கள்போயிருந்தார்
அப்படிக்குந்தானிருந்து ஆரணங்குமங்கையவள்
சப்ரகூடமஞ்சத்தில் தையலவள்நித்திரைசெய்தாள்
அந்தச்சமயத்தி லாரணங்குதாதியர்கள்
அருகேபுடைசூழ அரிவையர்கள்வந்துநின்று
தட்டியெழுப்பினார்கள் தாமக்குழலாளை
அலண்டுயெழுந்திருந்தா ளாரணங்குமங்கையவள்
காம்பழுகிநிற்பதென்ன கண்டார்கள்தாதியர்கள்
ஒருநாளுங்கருகாத மல்லிகைபுஷ்பமெல்லாம்
காம்பழுகிநிற்பதென்ன காரணமோசொல்லுமென்றார்

பவளக்கொடியாள் கண்டகனவை தாதிகளுக்குச் சொல்லுதல்.

பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடிசொல்லுகிறாள்
மஞ்சத்தின்மேலேநான் மாதர்களேநித்திரைசெய்தேன்
அந்தநல்லவேளையிலே ஆதிசிவனிங்கேவந்து
என்னை-தட்டியெழுப்பினார் தாமக்குழலார்களே
அலண்டுயெழுந்திருந்து யாரென்றுநான்கேட்டேன்
உம்மைப்பிறப்பித்த உம்பர்பிரான்வந்தேனென்றார்
எங்கேவந்தீரென்று இளங்கொடியேநான்கேட்டேன்
பதினாறுவயதளவும் பட்டமரசாண்டாய்
நீகேட்டவரம்நான்கொடுத்தேன் கிளிமொழியேஉந்தனுக்கு
நான்-மாலையிட்டுக்கொண்டதாக மங்கையர்களேகனவுகண்டேன்
மஞ்சத்தின்மேலேநான் மருவிருக்கக்கண்டேன்
நான்-கண்டகனவாலே கருகிற்றுபுஷ்பமெல்லாம்
இவ்வளவுநானறிவேன் மற்றொன்றுநானறியேன்
என்றேயிளங்கொடியா ளெடுத்துரைக்கலுற்றாள்
தாய்போல்வளர்த்தெடுத்த தாதியர்கள்தான்கேட்டு
மணமாலைசூட்டுதற்கு மனமுண்டோமங்கையரே
அப்படியேசம்மதித்தா ளரிவையிளங்கொடியும்
இவ்வார்த்தைகேட்க எழுந்தாரேதாதியர்கள்

பவளக்கொடியாள் கண்டகனவைக்கேட்டு தாதியர்கள்போய்ச் சேரம்புராசர்களுக்குச் சொல்லல்.

சேரும்புராசரண்டை தீவிரமாயோடிவந்து
முக்காலடிவணங்கி மூவிருகால்தெண்டனிட்டார்
தெண்டனிட்டமாதர்களை கண்டார்கள்ராசாக்கள்
என்னைப்பணிந்ததென்ன வந்ததென்னசொல்லுமென்றார்
அப்போ-கைகட்டிவாய்புதைத்துக் கன்னியர்கள்சொல்லுகிறார்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடிநாயகியாள்
பதினாறுவயதளவும் பட்டமரசாண்டிருந்தாள்
பட்டங்கட்டியாண்டிருந்தாள் பாருலகமத்தனையும்
இன்றையதினத்திலே இளங்கொடியாள்கோட்டையிலே
கண்டவதிசயத்தை கன்னியர்சொல்லுகிறோம்
பார்த்தவதிசயத்தைப் பாவையர்கள்சொல்லுகிறோம்
என்னவென்றுசொல்லி யெடுத்துரைப்போமன்னர்களே
மஞ்சத்தின்மேலிருந்த மலர்கள்கருகிற்று
இதுவென்னவென்றுகேட்டோம் இளங்கொடியாள்நாயகியை
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடிசொன்னது
தன்னைப்பிறப்பித்த சுவாமியவர்வந்துநின்று
சொற்பனஞ்சாதித்தாராம் தோகையிளங்கொடிக்கு
பதினாறுவயதளவும் பட்டமரசாண்டாய்
கேட்டவரம்நான்கொடுத்தேன் கிளிமொழியேயுந்தனுக்கு

பவளக்கொடிமேலே பிறந்திருந்தபதிவிரதை
பதினாறுவருஷமாய்ப் பட்டமரசாண்டாள்
மணமாலைசூட்டுதற்கு மாதுநினைவானாள்
கொம்பனையைகேட்டவர்கள் கோடானகோடியுண்டு
மாலையிடவந்தவர்கள் வையகத்தில்கோடியுண்டு
இன்றையநாள்வரைக்கும் மணமாலைசூட்டாமல்
நித்தியகன்னியாகவே இருந்தாளிந்நாள்வரைக்கும்
இப்போ-மணமாலைசூட்டுதற்கு மாதுநினைவானாள்
ஆருக்குகிடைக்குமோ அன்னநடைமாது
திங்கட்கிழமையிலே திகழ்புனர்பூசத்திலே
இருபதுநாழிகையில் எழிலமங்கிலியஞ்சூட்டுதற்கு
மனதுள்ளராசாக்கள் வந்திடுங்கள்பந்தலுக்குள்
மண்டலத்துராசாக்கள் மந்திரிகள்தான்கேட்டார்
அனைவோருமறியவென்று அடித்தான்பறையோசை
அடித்தானபறையோசை அங்ககாந்தான்கேட்க
மண்டலத்துராசாக்கள் மந்திரிகள்தான்கேட்டார்
திக்கிலுள்ளராசாக்கள் துரைகளெல்லாங்கேட்டார்கள்
பிள்ளையார்கோயிலண்டை இருந்ததொருபோர்விசையன்
அடித்தப்பறையோசை ஆணழகன்கேட்டுவிட்டான்
சந்தோஷப்பட்டலவோ சரீரங்கள்பூரித்து
என்னவடிவாகப் போவோம்நாம்பந்தலுக்கு
ஆரைநினைக்கலுற்றான் அளவற்றசிந்தையிலே
மாயன்பெருமாளை மனதிலேதானினைந்து
அடியளந்தமாயவனே ஐயாசரணமையா
காக்குங்குலதெய்வமே கரியமால்மைத்துனரே
வெண்ணெயுண்டசெவ்வாயா வெற்றிகொடுக்குந்தூயா
கண்ணுக்குஇமைபோலே காக்கிறேனென்றுசொன்னீர்
இதுவேளையிதுசமய மேந்திழையைக்காருமையா
பவளக்கொடியாளை மணமாலைசூட்டுதற்கு
மாலைவந்துமார்பில்விழ வரந்தாருமெந்தனுக்கு
மூக்காலேமுள்பொருக்கி முனைமரத்தில்கூண்டுகட்டி
காக்கையின்குஞ்சுபோல் கடிகிவளர்த்தாயே
முட்டையின்குஞ்சுகளை முகமறியாப்பாலகரை
பிட்டுவளர்த்தீரே பிரபலியமாகவென்று
உந்தன்தயவாலேயல்லோ வுயிர்கொண்டுலாவுகிறேன்
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளை
மணமாலைசூட்டுதற்கு வடிவெனக்குத்தாருமென்றார்

ஸ்ரீகிருஷ்ணதேவர் அருச்சுனனுக்குக் கிழப்பிராமண ரூபங்கொடுத்தல்.

அந்தச்சமயத்தில் அருச்சுனராசதுரை
தொண்ணூறஞ்சென்ற துவண்டகிழவனானார்



ஸ்ரீகிருஷ்ணமூர்த்தவா அர்ச்சுனனுக்கு கிழப்பிராமண

ரூபங்கொடுத்தல்.

நாநூறும்பத்துஞ்சென்ற நரைத்தகிழவனார்
தும்பைப்பூப்போல துவண்டகிழவனார்
நாணப்பூப்போல நரைத்தகிழவனார்
பண்ணைப்பூப்போலே பழுத்தகிழவனார்
குஷ்டரோகிபிராமணரைப்போல் கொற்றவரும்ரூபமானார்
வெள்ளிரிப்பழம்போலே வெடித்ததுதேகமெல்லாம்
வெடித்தாணத்தில் புழுக்கள்நெளியுது
சீழுஞ்சிலைதண்ணீருஞ் சிந்துதே தேகமெல்லாம்
ஒருகண்ணுபொட்டை ஒருகாலுநொண்டியானார்
சொட்டைத்தலையொன்று ஒடுக்குகொண்டாயுதம்
செல்லெறித்தபுத்தகத்தைச் சேரவேணைபிடித்து
பட்டயம்போலாக பரக்கதிருந்தாலிட்டார்
அச்சுதானந்தரும் அறியாதபிள்ளையானார்
பிராமணரூபமது வெடித்தாலே புண்ணியனும்
பிள்ளையார்கோயிலண்டை இருந்தாரிருவருமாய்

சோரம்புராசாக்கள் கலியாணஞ் செய்வதற்கு

பந்தலலங்கரித்தல்.

அந்தச்சமயத்திலே சோரம்புசாக்கள்
வாசலலங்கரித்தார் மணமாலைசூட்டுதற்கு
முத்தைகப்பிளந்தார்கள் மூன்றுக்கால்பந்தலிட்டார்
பவளம்பிளந்தார்கள் பந்தக்கால்நட்டார்கள்
வெள்ளியால்காலிறுத்தி வெத்திலைபால்பந்தலிட்டார்
சம்பாகோல்நிறுத்தி அரும்பாலேபந்தலிட்டார்
ஈர்க்குப்பிளந்தார்கள் இருகாதம்பந்தலிட்டார்
மூங்கில்பிளந்தார்கள் முக்காதம்பந்தலிட்டார்
நாணல்பிளந்தார்கள் நாற்காதம்பந்தலிட்டார்
வல்லிநார்ப்பிளந்து வாசலலங்கரித்தார்
மாவிலைத்தோரணமும் மகுடநல்லதோரணமும்
அரசிலைத்தோரணமும் ஆலிலைத்தோரணமும்
கண்ணாடிசல்லிகட்டி கவரிமான்சுங்குவிட்டு
பச்சைக்கிளிகள் பந்தலிலேதொங்கவிட்டார்
வெட்டிவேர்குருவேரும் விசித்திரமாய்தொங்கவிட்டார்
பட்டாலலங்கரித்து பாவனையாயொப்பமிட்டார்
கோத்தமுத்தைத்தூக்கி கொலுமுகத்தில்பந்தலிட்டார்
மற்றமுத்தைபந்தலிலே மாணிக்கமாலைத்திரைத்து
வாழைமரங்கமுகுமாம் வாசலெங்குங்கட்டினார்கள்
சோலைபலாமாம் தெருவெங்குங்கட்டினார்கள்
எங்கெங்குந்தோரணமும் எங்குந்திருவிளக்கும்
சன்னல்கள்தோறுஞ் சரங்கள்மிகக்கட்டினார்கள்

கோவிந்தாவென்று கொற்றவனும்கீழ்விழுந்தான்
தள்ளாடித்தடியூன்றி தாமெழுவார்மெள்ளமெள்ள
சொக்கென்றிரும்புவார் கோழைவந்துமாரடைக்க
வப்புவாய்கொட்டிவந்த வாய்நீருசொள்ளொழுக
கண்ணிரண்டுங்கீரைவிதை காதிரண்டுங்கேளாது
தூக்கியடிவைப்பாராஞ் சுழன்றுவிழுவாராம்
எடுத்தடிவைப்பாராம் இடறிவிழுவாராம்
அறுகம்புல்தட்டினால் அறுபதிடம்விழுவார்
மூங்கில்வேர்தட்டினால் முப்பதிடம்விழுவார்
இப்படியாகயிருக்கின்றவேளையிலே
இவனைக்காணுதேயல்லோ கலங்குகிறாள்பவளகன்னி
மாலையிடத்தேடி மயங்குகிறாள்மங்கையவள்
இவனைக்-காணுதேதேடியல்லோ கலங்கிதவிக்கிறாள்
சேராம்புராசாக்கள் துரைகளிடபந்தலிலே
வாகனங்கள்விட்டிறங்கி வந்தமர்ந்தராசாக்கள்
மணக்கோலப்பந்தலிலே மன்னவரும்வந்தமர்ந்தார்

### பவளக்கொடியாளை ஸ்நானஞ்செய்வித்து ஆபரணங்களை அலங்கரித்தல்.

பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளை
ஆயிரந்தாதியர்கள ஆரணங்குமோடிவந்து
சலவைக்கல்மண்டபத்தில் பொற்கொடியைக்கூட்டிவந்து
பூவிரத்னமண்டபத்தில் பொற்கொடியைக்கூட்டிவந்து
தண்டையசைய சதங்கைத்திருதிகென
கொண்டையசைய குயில்வந்துகூத்தாட
வட்டமணைமேலே மாதரசையிருக்கவைத்து
நல்லெண்ணெய்கொண்டுவந்து நலங்கிட்டார்பந்தலுக்குள்
சந்தனயெண்ணெய்கொண்டு தையலர்க்குமிட்டார்கள்
குங்குமயெண்ணெய்கொண்டு கூந்தலுக்குமிட்டார்கள்
முந்நூறுபிராமணஸ்திரீகள் மூன்றுநலங்கிட்டார்கள்
ஐந்நூறுபிராமணஸ்திரீகள் ஐந்துநலங்கிட்டார்கள்
மங்களம்பாடியே நலங்கிட்டார்கூந்தலுக்கு
சோபனங்கள்பாடியே நலங்கிட்டார்கூந்தலுக்கு
ஆலாத்திசுத்தியே அபிஷேகமாட்டலுற்றார்
மஞ்சனச்சாலையிலே மஞ்சள்நீராட்டிவைத்தார்
ஒட்டிமஞ்சள்நீராட்டம் ஒளிபவளநீராட்டி
ஸ்நானங்கள்பண்ணியே தாமக்கருங்குழலாள்
நீர்காட்டிவீழ்த்தியே நெருப்பில்தலைசாய்த்து
ஈரத்துகிலைகளைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
நனைந்ததுகில்களைந்து நாகரீகப்பட்டுடுத்தி

பாவாடையுள்ளுடுத்திப் பட்டாடைமேல்சுத்தி
ஆனந்தமாரியருக்கு அலங்காரம்பண்ணலுற்றார்
பூவாழைமுவியண்ணை தொட்டே போதமயிர்கோதி
சீவிச்சிக்கறுத்து சிம்பிள்போலகொண்டையிட்டு
வாரிமுடித்தார்கள் மாணிக்கக்கொண்டையிட்டு
ஒவ்வொருமயிர்களுக்கு ஒவ்வொருபொன்னிதழாம்
பொன்னிதழும்பூவிதழும் போதமுடித்தகொண்டை
சுத்திமுடித்துவைத்த கொண்டைவந்துதோளசைய
தட்டிமுடித்துவைத்த கொண்டைவந்துதாமசைய
கொண்டைக்குத்தண்டையும் கொண்டைதாங்கிமாலையும்
ஆயிரம்பொன்பெற்ற அன்பானசவுரிவைத்து
கொண்டைசடையில்லை குப்பியலங்கரித்து
ஆண்மயிலும்பெண்மயிலும் அணிந்தாரழகுபெற
பல்லியுமாழ்வாரும் பக்கத்திலணிந்தார்கள்
சந்திரபிறைசூரியபிறை தையலற்குதானணிந்தார்
நெற்றிக்குச்சுட்டிகட்டி நேர்விழிக்குமையெழுதி
கண்ணுக்குமையெழுதி கஸ்தூரிபொட்டுமிட்டார்
முத்தாலேபொட்டுமிட்டு முன்னாலேதொங்கவிட்டார்
அன்னகொப்புவர்ணகொப்பு அருகுவாளிசொருகுவாளி
மாணிக்கவாளி மயிர்கீழேகோலியிட
கல்லிழைத்தகம்மலுங் காதில்தரித்தார்கள்
இருதலைபட்சிகளும் இசைந்ததொருகொப்பழகும்
பதக்கம்புலிகளும் பச்சைக்கல்முருகுகளும்
முத்தணிந்தமூக்குத்தி நத்துமணிந்தார்கள்
ஒற்றைச்சரடுகளாம் ஒருபுரமாய்பொற்சரிகை
முத்துச்சரப்பளியாம் மோகனமாலைகளாம்
வட்டமுத்துசரப்பளியாம் பார்நிறைந்ததாழ்வடமாம்
கொத்துசரப்பளியாம் கோலமணித்தாழ்வடமாம்
சந்திரகாந்திசரப்பளியுந் தரித்தார்களப்போது
நாய்க்காரைத்தன்னையும் கடுக்கழுத்தில்தான்தரித்து
தோள்வாங்கிகைவாங்கி துதித்திட்டகைவளையல்
கடகஞ்சரிபவளங் கைநிறைந்தபொன்வளையல்
பத்துவிரலுக்கும் பதிந்தகணையாழி
உத்திரசஞ்சமது போட்டார்களுத்தமிக்கு
எட்டுவிரலுக்கும் இசைந்தகணையாழி
அரைக்கிசைந்தஒட்டியாண மழகுபெறசாத்தினார்
காலாழிகல்லணையாம் பீலாழிபில்லணையாம்
ஆடையாபரணமெல்லாம் அலங்கரித்தாளந்நேரம்
பட்டுபளபளென்ன பாடகநாலசைய
முத்துமிலுமிலென்ன முந்தானிபொன்னசைய

திருநீற்றுக்காப்பு திருச்சாந்துபொட்டுமிட்டார்
அஞ்சனமன்னனுக்கு அழகான மையுமிட்டு
மல்லிகைமாலை மாதரில்கழுத்திலிட்டார்
சந்தனமும்பன்னீரும் குழைத்துப்பூசுகிறார்
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
அப்போ-ஆராதனைதர வளவறுக்கையிலே
ஆலவாய்சொக்கரை அடிபணிந்துதெண்டனிட்டாள்
மாயன்பெருமாளை மனதிலேதானினைத்து
ஸ்ரீரங்கநாயகரே துணைவாருமெனநானுக்கு
ஆயன்பெருமாளை அவள்மனதில்தானினைத்தாள்
பரமசிவனருளால் பார்வதிகிருபையினால்
பவளக்கொடிமேலே பிறந்தபதிவிரதை
ஆதிசிவன்பூமாலை அனுப்புங்களர்ச்சுனனுக்கு
கும்பிட்டுநின்றாளே கொம்பனையமாதுகன்னி
சொக்கர்மனமகிழ்ந்து சிந்தைமகிழ்ந்தருளிந்து
ஆலவாய்சொக்கரும் அம்மன்மீனாட்சியும்
திருமாலைசந்தனமும் திருநீறுதானெடுத்து
ஆரணக்குமாரனுக்கும் அப்போதனுப்பிவிட்டார்
வந்தபூமாலையை மாதரவள்கைபிடித்தாள்
மாணிக்கத்தேர்தனிலே வந்துமெள்ளவேறினார்கள்
ஏறினபோதையிலே எடுத்தார்வெண்குடைகள்
சுத்திக்குடைபிடித்தார் சூரியனைக்காணாமல்
பக்கக்குடைபிடித்தார் பரவாளைக்காணாமல்
கவிந்துகுடைபிடித்தார் சந்திரனைக்காணாமல்
முந்நூறுதேங்காயை முடிபோட்டுடைத்துவிட்டார்
ஐந்நூறுதேங்காயை அடையுடைத்துவிட்டார்
மேளமுழக்குதுகாண் முரமண்டலமசைய
அடிபடுதேபேரிகை அந்தரத்தனிலே
பேரிகைசத்தம் பெருகியமுழங்குதங்கே
ஐங்காதவழிதூரம் பொய்க்காளமூதிவர
நாற்காதவழிதூரம் நெடுங்கிடுவதானமுழங்க
முக்காதவழிதூரம் முரசுமுழங்கிவர
மச்சரதமேறி வாராளம்மாதுகன்னி
அங்கிருந்தராசாக்க ளனைவோரும்பார்த்துரைத்தார்
ஒருவர்க்கொருவ ருகந்துமெச்சுகிறார்
நீருபூத்தநெருப்பை ஊதிப்பார்த்ததுபோலே
ஆயிரமின்னலிலே சோதியினைமின்னுதல்போல்
தங்கத்தைகாய்ச்சியே தரையிலேவிட்டாற்போல்
சவத்தைக்காய்ச்சியே இலையிலேவிட்டாற்போல்

பொன்னையுருக்கி பூமியிலேவிட்டாற்போல்
சந்திரனைப்போலே தனுப்புகிறாள் தையலவள்
சூரியனைப்போலே துலங்குகிறாள் தோகையரும்
பாருக்கிருக்குமோ அன்னமானோதாற்போல்
காருக்கிருக்குமோ இந்தநல்லபாக்கியங்கள்
தாங்களெசொல்லியே தலைவிதிக்கப்பார்த்திருந்தார்
ஆனந்தவாழ்மாரி அவளுடையந்தவருது
அரசர்சபைநடுவே ஆரணங்குதோவருது
அரசர்சபைநடுவே ஆரணங்குதோர்கிருதி
என்றுதுமென்னுள்றாள் ஏலப்பசுங்கொடியாள்
ஆறையழகுமன்று ஆச்சுகராசாவே
வடிவேலுவாருமென்று மன்னவனைச்சொல்லுகிறாள்
தன்னைவடிவாக பிருக்குறதோயாகானுமிவன்
இவளைப்போலபெண்கள் தாமொக்குங்கிடையாதே
நாட்டிலமையாதே காயகியாள் தன்போலே
என்றுமனதில் இசைந்துவழிபோனீரு
தருமபுரிநகல்லோ தானடந்துபோனாறே
ஈலசெய்வேனீஸ்வரமோ தாமே துமறிபேனே
கிழக்குமுகம்நோக்கி பார்த்தாளே ராசகன்னி
பக்கத்தில்தோழியவள் பாங்கியவளேதுசொல்வாள்
முக்குமுடிதரித்த முடிமன்னராசாக்கள்
என்று-தாதியவள்சொல்ல தையனல்லாள் தான்கேட்டு
தெற்குமுகமாகத் திரும்பினாள்மெல்லியவள்
பக்கமிருந்தவள் பாங்கியவளேதுசொலவாள்
வச்சிரமுடிதரித்த மந்திரிகள்ராஜரம்மா
மண்டலத்தையாளுகின்ற மகாராசராசாம்மா
மாலைகழுட்டியே மன்னர்மேலபோடுமென்றாள்
மேற்குமுகமாகத் திருபினாள்மெல்லியவள்
பக்கத்திலிருக்கின்ற பாங்கியவளேதுசொலவாள்
பவுந்தத்துராசாக்கள் பல்லக்குதுரைகளம்மா
திக்கரசையாளுகிற துரைகளிவர்களம்மா
மாலைசுழட்டியே மன்னவர்மேல்போடுமென்றாள்
வடக்குமுகமாகத் திரும்பினாள் மாதுகன்னி
பக்கத்திலிருந்தொரு பாங்கியர்களேதுசொல்வார்
திக்கர்சையாண்டதொரு துரைகளிவாகளம்மா
வடதேசராசாககள் மன்னரிவர்களம்மா
உன்னழகுக்கேற்ற புருஷனிருப்பாண்டி
உன்-மனதுக்கிசைந்த மணவாளன் தானிருப்பான்
மாலைசுழட்டுமென்றாள் மாதரினாய்கொடியே

பவளக்கொடியாள் அர்ச்சுனனை மாலைதரித்தல்.

பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளும்

அப்போ-யாரைநினைத்தாளே அளவற்றசிந்தையிலே
எவரைநினைத்தாளே எண்ணமற்றசிந்தையிலே
ஆகாயவாணியம்மா அம்மைபிடாரிகளே
மஞ்சளழகியரே மடிசேலைக்காரிகளே
பொங்கநயினாரே பொற்கொடியாண்டவரே
இல்லறத்துதேவதைகள் எல்லோருந்துணையிருங்கள்
ஆலவாய்சொக்கரே அங்கயற்கண்மீனாட்சி
மதுரைமீனாட்சியம்மனை வந்துதுணையிருங்கள்
என்னைப்பிறப்பித்த ஈஸ்வரனே துணையிருங்கள்
மாயன்பெருமாளே மங்கைநல்லலட்சுமியே
ஆயன்பெருமாளே யனைவருந்துணையிருங்கள்
முப்பத்துமுக்கோடி முனிவரெல்லாங்காத்திருங்கள்
வசிஷ்டருங்குந்தியம்மாள் மணிமாலைகாத்திருங்கள்
நான்-ஆகாயம்விட்டமாலை அருச்சுனனார்தனகழுத்தில்
நான்-சுழட்டிவிட்டமாலையது தேர்விசயன்தனகழுத்தில்
அர்ச்சுனனார்தனகழுத்தி லழகுமாலைவிழவேணும்
என்னவடிவாக யிருக்கிறாரோநானறியேன்
தேவரைத்தானினைந்து சுழட்டினாள்மாலைதன்னை
சுழட்டவிட்டமாலையது தெய்வலோகம்போகுது
சூரியமண்டலத்தை சுற்றியுலாவுகுது
எதிர்பட்டதேவர்களை யாவரையும்பார்த்துவரும்
நாலுபக்கத்து ராசாக்களைசுற்றிவரும்
தேடியேபார்க்குதே தேர்விசயனருச்சுனனை
ஆயனைப்போலாக இருந்ததோராருச்சுனர்மேல்
வாள்விசயன்தோள்மேலே வந்துவிழுந்தது
பிராமணர்தன்கழுத்தில் விழுந்ததுபூமாலை
தேவதுந்துமிமுழங்க தேவர்பூமாரிபெய்ய
ஆகாயபேரிகைதா னடிபடுதுதிமிதிமென்று
புஷ்பவருஷந்தான் பொழிந்தார்கள்தேவரெல்லாம்
ஆராட்சிமணிகளு மடித்ததுஓசையுடன்
சேரம்புராசாக்கள் அனைவர்பார்த்துவிட்டார்
சேரம்புராசாக்க ளனேகங்கூடியிருக்க
மண்டலத்துராசாக்கள் மந்திரிகள்வந்திருக்க
மற்றொருவர்தோள்மேலே வீழாமலிந்தமாலை
பார்ப்பான்கழுத்திலே விழுந்ததென்னபாவமிது
ஆரியனைமாலையிட யிருந்தாளோவாரணங்கு
வேதியற்குமாலையிட விதித்ததோயென்மகளே
செல்வமாய்ப்பெண்பிறந்து சிரழிந்தாளாச்சோ
அருமையாய்ப்பெண்பிறந்து அம்பலமானீரே
பிச்சையிரந்துண்ணும் பிராமணர்க்குப்பெண்ணாகி

அந்தச்சமயத்தி லாயன்பெருமாளும்
செந்தும்பிபோலே ஸ்ரீராமர்வடிவெடுத்தார்
இல்லென்று நான்பறந்து தேன்மொழியாள் தன்செவியில்
வந்துநுழைந்தார் மயிலனையாள் தன்செவியில்
அஞ்சாதேயஞ்சாதே வருநங்கையஞ்சாதே
ஆணழகுடையவன் அர்ச்சுனராசன்காண்
என்றவுரைத்தா ரிளங்கொடியாள் தன்செவியில்
அருஞ்செவியிலதாலுரைத்து ஆயனும்போய்விட்டார்
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
வேடத்தைமாற்றி விசயர்வடிவெடென்றாள்

அருச்சுனன் கிழப்பிராமணவடிவைவிட்டுத்
தன்சுயரூபமெடுத்தல்.

சேரம்புராசாக்கள் சிந்தைகுளிர்ந்துவிட
கண்டோர்பயந்துவிட கன்னிகைதடுமாற
சிந்தைகுளிர்ந்துவிட தேர்விசையன்வடிவெடுத்தார்
அங்கங்குளிர்ந்துவிட அருச்சுனர்வடிவெடுத்தார்
முன்னழகும்பின்னழகும் மூக்கில்மட்சரேகைகளும்
பல்லில்பரசவினை பாதத்தில்செந்தாமரை
நாவில்நெட்சத்திரம் நயனவிழிப்பார்வைகளும்
மாயன்தயவாலே வாள்விசயன்ரூபமானார்
ஆயன்தயவாலே அருச்சுனன்ரூபமானார்
கண்டவர்தான்மயங்க காண்டீபன்வடிவெடுத்தார்
பார்த்தவர்கள்தான்மயங்க பார்த்தீபன்வடிவெடுத்தார்
ஐந்துபிராய மறியாப்பிராயமென்று
அச்சுதானந்த ரையரும்வந்துவிட்டார்
பவளக்கொடிமாது பார்த்துமகிழ்ந்துவிட்டாள்
சேரம்புராசாக்கள் தேர்விசையன்றன்னைக்கண்டு
கண்டுமகிழ்ந்தார்கள் காண்டீபனர்ச்சுனனை
பார்த்துமகிழ்ந்தார்கள் பார்த்தீபனருச்சுனனை
விசயனழகுகண்டு மெத்தமகிழ்ந்தார்கள்
எங்கள்-மகளார்க்குயேத்த மணவாளனவந்தீரோ
அருச்சுனனைப்போலாக வாராமலானழகா
பிராமணவடிவாக ஏனெடுத்தீர்புண்ணியரே
வந்தென்னைப்பெண்கேட்டால் கொடுக்கேனென்றுசொல்லுவமோ
கனக்கிழவனைப்போல் மேன்காண்வடிவெடுத்தீர்
என்றுமனமகிழ்ந்தார் ரியலாசராசாக்கள்
அந்தசமயத்தி லனைத்துமகாதுரைகளெல்லாம்
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
ஆரியனைமாலையிட அழைத்துப்போகக்கண்டவர்கள்
இஞ்சிதின்றகுறங்குபோ லேக்கரித்தராசாக்கள்

விருத்தக்கிழவனுக்கு வேதியர்க்கு [illegible] தென்று
அங்கிருந்தெண்பல தேசத்துமன்னராசாக்கள்
அவரவர்மாளிகைக்கு அனைவரும்போகலுற்றார்
சேரும்புராசாக்கள் துரைகளவரேதுசொல்வார்
வில்விசயனருச்சுனனை வேந்தர்வாழ்த்தழைத்து
நல்லவேளை தப்பாமல் ராகுகாலம்வாராமல்
வாச்சியங்கள் தியாச்சியங்கள் வாருதவேளைகண்டு
சேஷபனை போட்டு சிறைபந்தலிட்டு
சென்னலரிசிகொண்டு செங்கதிரோன்பொங்கலிட்டு
மாப்பிள்ளையும்பெண்ணையும் மணைமேலிருத்தவைத்து
மூன்றாறுபிராமணஸ்திரீகள் முகமுழுமுளைவிளக்க
சாலுங்கரகமும் சந்திரற்குமுன்பாக
அம்மிவலமாக அரசாணிமுன்பாக
வேதப்பிராமணர்கள் வேதங்களோதிவர
ஓமப்புகைவெறிய வுடனேவேதஞ்சொல்ல
காப்பரிசிதானழுங்கி கங்கணமுங்கட்டினார்கள்
சேரும்புராசாக்கள் துரைகளெல்லாமிருந்து
பூவுஞ்சமூகநாலும் மஞ்சளுடனெல்லினையும்
தாலியுங்கூறையுந் தான்கொண்டுவந்தார்கள்
குருகுலத்தராசாவே குந்திமகனாரே
மந்தாரக்குந்தியரும் பெற்றமகனாரே
பங்கயஞ்சீர்கன்னாள் பவளக்கொடியாளை
தந்தேனுனக்கிங்கே தாரைநீர்பிடியுமென்றார்
சாலுக்குமிஞ்சிவிட்டார் கைக்குணையாமிட்டார்
தையலாளைத்தான்கொடுத்து தாரைநீர்வார்த்தார்கள்
எங்கிழையைத்தான்கொடுத்து இஷ்டநீர்வார்த்தவரும்
மாலைதரித்து மணமாலைசூட்டுமென்றார்
அப்போதருச்சுனனு மாயனைத்தானினைத்து
தாலியைக்கட்டினான் தேர்விசயனருச்சுனனும்
பிர்மமுடிமூன்றுமுடி போட்டானேவாள்விசயன்
காப்பரிசிதான்வழங்கி கங்கணமுந்தானவிழ்த்தார்
அம்மிமிதித்து அரசாணிசுற்றிவந்து
பெரியோர்களெல்லோரும் பொருந்தமனமகிழ்ந்து
மன்னவனுந்தேவியுமாய் மாளிகையிலேபுகுந்து
தங்கத்தின்மேடையின்மேல் தனஞ்சயனும்வீற்றிருந்தான்
ஐப்பதுபேரு மவர்களுடனேதாதிமாரும்
பொங்கிமனங்குளிர்ந்து பொற்கொடிமாதரெல்லாம்
தனஞ்செயற்கும் கோதையர்க்கும் சுவாமிசேஷையிட்டு
பாலும்பழமும் பரிவுடனேதான்கொடுத்தார்

பாலமிர்தமுண்டு பசியாறிக்காலிருந்தார்
அப்பால்வந்தமனிதருக்கும் மகாபெரியசேனைகட்கும்
அத்தரும்பன்னீரும் அழகாகத்தான்தெளித்து
சந்தனமுஞ்செந்தபொடி தாம்பூலந்தான்வழங்கி
பாரிசாதபுட்பம் பரிமளங்கள் தன்னுடனே
பூரிவெகுதானங் கொடுத்தார்பெரியோர்க்கு
தட்சணைத்தாம்பூலம் தார்வேந்தர்தான்கொடுத்தார்
வந்தமனிதர் மகரசேனையெல்லவர்க்கும்
கைக்குச்சலங்கொடுத்தார் கட்டழகரெல்லவர்க்கும்
பந்தியமர்த்தி பரிமாறிபோசனங்கள்
பொரித்தபொரிக்கரியும் பொன்போல்பருப்புகளும்
பத்துவகைபச்சடியும் பசியாறிபாலவர்களும்
புத்துருக்குநெய்யுமாய்ப் போதமிகப்படைத்து
முப்பழஞ்சர்க்கரையும் அப்பளமுந்தான்படைத்து
ஆபாசந்திரவே பாயாசந்தான்கொடுத்து
போசனங்களுண்டு புகழ்வேந்தர்யாவருந்தாம்
கைகாலலம்பி சனமிசந்தமன்னரெல்லாம்
வேடிக்கையாக வீற்றிருந்தார்பந்தலிலே
அப்போ-வெட்டிபபாக்கும் பிராமணக்குவெற்றிலையும்
சொர்னபுஷ்பமாலைகளும் சோடுசகலாத்துகளும்
வைத்துக்கொடுத்தார்கள் வரிசைவெகுமானம்
ஒட்டைகுதிரைகள் உத்தமர்கள்பொய்பெழுகி
உத்தமரெல்லோரும் உள்ளங்களிகூர்ந்து
காண்டபனருச்சனையும் கன்னிபவள்ளைபைங்கிளியும்
ஊர்கோலமானபின்பு வத்சமனுக்கேளியும்
பள்ளியறைமண்டபத்தில் பாங்குடனேபோசனுற்றார்
வந்திருந்தராசாக்கள் மன்னவர்களெல்லோரும்
அவரவர்கள்ராச்சியத்தை ஆளுகைக்குப்போனார்கள்
வாள்விசையன்கோமானும் மருவண்டுதானிருந்தான்
பதினைறுநாளாச்சு பார்த்தன்வந்தமாலையிட்டு
இப்படியாகயிருக்கின்றவேளையிலே
அல்லிப்பெருமாளும் ஆரணங்கேதுசெய்தாள்
மகுடத்துரைச்சியரும் வாழ்வரசிபள்ளியரும்
கொச்சித்துரைச்சி கொடிமதுரைபல்லியரும்
மச்சித்துரைச்சி வடமதுரைபல்லியரும்
காலையில்தானெழுந்து சனிஸ்னானசுத்திபண்ணி
பாலைகொண்டுபல்விளக்கி நீர்கொண்டுகொப்புளித்து
பொய்கையில்போயிறங்கி பொற்கிளியுமப்போது
சாத்துகிலகளைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
நனைந்ததுகில்களைந்து நாகரீகபட்டுடுத்தி

சொக்கருளைக் கூறு திருநீற்றுக்காப்புமிட்டு
மதுரைமீனாட்சியவரை மாதாவைத்தானினைத்து
ஆரன்பூசையரிபூசை அநுஷ்டானம்பண்ணியவள்
இங்கிதமானதொரு அலங்காரம்பண்ணலுற்றாள்
சல்லடந்தானெடுத்து தட்டிபிருவெடுத்து
தட்டியின்மேலொட்டியாணம் சாதாவரித்துகட்டி
சல்லடத்தின்மேலேயவள் தாமரைப்பூக்குத்திட்டு
சங்குவைத்தாள்வெள்ளைவைத்தாள் சாதிலிங்கபொட்டுமிட்டாள்
வலப்புறத்துசுங்கிலே மாகாளியட்சாமும்
தென்புறத்துசுங்கிலே தெய்வகன்னியட்சாமும்
முத்துகபாயணிந்து முத்துசெல்லாமங்கிபோட்டாள்
வச்சிரகபாயணிந்தாள் மார்நிறைய அங்கிபோட்டாள்
கிரீடபுஜகீர்த்தி கீர்த்தியுந்தானணிந்தாள்
அங்கிகபாயணிந்தாள் அல்லிமலர் நாயகமும்
கேடயவல்லயமும் கிளிமொழியாள் தான்தரித்தாள்
மந்திரவாளெடுத்து வலதுகையில்தான்பிடித்தாள்
பதினெட்டுஆயுதமும் பத்தினியாள் தான்தரித்தாள்
முத்துமிதியடியை தொட்டுநடந்துவந்து
வசந்தமணிமண்டபத்தில் மாதவளும்வந்தமர்ந்தாள்
கொலுகூடமண்டபத்தில் கொம்பனையாள்வந்தமர்ந்தாள்
மந்திரிபவளசேனை மயிலனையும்வந்தமர்ந்தாள்
தாதிகளுந்தோழிகளுந் தையலரைச்சூழ்ந்தார்கள்
செங்கமலத்தாதி சேனைபதிபவளசேனை
வெண்சாமரைக்கவுரி வீசியவள்பக்கம்நின்றாள்
ஆலவட்டஞ்சாமரை அருங்கிளிமார்வீசிவர
மல்லிகைவிசிறிகளும் மயில்விசிறிதான்வீச
செண்டாடிபந்தாடி தேன்மொழிமார்சூழ்ந்துவர
கேளிக்கைபார்த்து இருக்கிறாள்கொம்பனையாள்
சங்கீதம்பார்த்து இருக்கிறாள்தையனல்லாள்
முத்துவிற்றவர்த்தகரும் வேணகணக்கர்களும்
கணக்குகட்டுதானெடுத்து கடுகவேவாரார்கள்
கொம்பனையாள்முன்னேவந்து கும்பிட்டுதெண்டனிட்டார்
கைகட்டிநின்றார்கள் கட்டழகரெல்லவரும்
மகுடத்துரைச்சியவள் வாழ்வரசியேதுசொல்வாள்
முத்துகொடுத்ததும் விற்றகணக்குகளும்
அண்ணுடங்கணக்குகளை அம்பலத்தேராமல்
எட்டுநாள்கணக்குகளும் எழுதிமுடியுமென்றாள்
எட்டுநாள்வாராமல் இருந்தவனைப்பின்னை
ஒருமுத்துக்குறைந்தாலே உயிர்க்கழுவில்போட்டிடுவேன்
இருமுத்துக்குறைந்தாலே கல்பிளந்திடுவேன்

வாயாற்பொறிப்பறக்க வலதுகண்ணாலைவ்வீச
செந்தலைநாகம்போல் சீறிவெறிபார்த்தாள்
கண்ணாற்பொறிபறக்க காதங்களைவீச
வாயாற்பொறிபறக்க வலதுகண்ணாலைவ்வீச
ஈச்சம்பழம்போ லிருகண்ணுந்தான்சிவக்க
கோவைப்பழம்போலே கொள்ளிகொண்டுவீசுதுபார்
கண்டச்சனைத்தகளைக் கடித்துமிழ்ந்தாலல்லெயரும்
கணக்குக்கதிகாரி கைகால்நடுங்கிவிட்டார்
எட்டுநாள்கணக்குகளும் எழுதிமுடிக்கலுற்றார்
கணக்குமேல்கண்ணா யிருக்கிறாள்கன்னியரும்
ஆராலுங்கூடியே ஆற்றவொண்ணாக்கோபமப்பா
அந்தச்சமயத்தில் அங்குவாரான்புத்திரனும்
வீதிவிலாசமது விளையாடிவேல்வேந்தன்
தங்கத்தேரோட்டியே தனஞ்செயன்புத்திரனும்
செம்பொன்தேரோட்டியே சித்திரவீதியெல்லாம்
முத்தின்தேரோட்டியே முடிமன்னர்வீதியெல்லாம்
மாணிக்கத்தேரோட்டி மதுரைத்தெருவீதியெல்லாம்
தண்டையசையவே சதங்கைத்தகதகென்ன
அரைவடமுங்கிண்கிணியும் அசைந்துநிழல்காட்ட
கணையாழிசோதியிட கண்டசரங்கள்மின்ன
வட்டமிட்டநெற்றியிலே வயிரநட்டுநின்றிலங்க
சருவாபரணங்களும் தாழ்வடமுந்தானசைய
சிங்காமிதியடியாம் சிங்காளில்லுங்களும்
பக்கமிருபுரமும் பட்டாகமுட்டிவர
கத்திகட்டுமன்னரெல்லாம் கைகட்டியேந்திவர
ஈட்டிபிடிமன்னரெல்லாம் இருபுரமுஞ்சூழ்ந்துவர
பொற்பரிசுமேலாகப் பிள்ளைவருகுதுபார்
வெகுசனங்கள்கூடி நெருங்கியிடங்கொள்ளாமல்
அங்கேநெருங்கிவந்த அருமகனைக்கண்டுவிட்டாள்
அப்பாவருக ஆணழகாபுத்திரனே
வருகவருகவென் வாழ்வேவருகவென்றாள்
திருவரும்பூவே தேனேவருகவென்றாள்
கண்ணின்மணியே கருவிளமேநீவருக.
கண்மூன்றுடைய கைலாசநாதரே
சொக்கர்திருவாசலுக்குத் தூண்டாமணிவிளக்கே
வைகைக்கரைதனக்கு மண்சுமந்தசொக்கரே
கப்பலுஞ்சோங்குங் கரைதுறையுமுள்ளவனே
அப்பாவருகவென்று ஆவலுடன்முத்தமிட்டாள்
வாரியெடுத்தாளே மதிமுகத்தில்முத்தமிட்டாள்
மைந்தனையேந்தி மடியிலேவைத்திருந்தாள்

போரஞ்சாமன்னன் புலந்திரனுக்கூறுவான்
போதும்போதுமென்னுச்சி பிள்ளையைக்கொஞ்சினது
மைந்தனைக்கொஞ்சினது போதுமம்மாதாயே
தங்கத்தேர்தந்தாரே தனஞ்செயனென்பாட்டன்
செம்பொன்தேர்தந்தாரே தமிழ்வேந்தரென்மாமன்
பளிக்கத்தேர்தந்தார் வளநாட்டுராசாக்கள்
முத்துத்தேர்தந்தார்கள் முடியணிந்தராசாக்கள்
சித்திரவீதி தெருக்கள்பதினாயிரமும்
மதுரைப்பெருந்தெருவும் மட்டிலாவீதிகளும்
பவளத்தேரோட்டவென்று பதிலியேநான்கேட்டேன்
அவ்வார்த்தைகேட்டாளே அல்லிப்பெருமாளும்
அருச்சுனன்போனதொரு சேதியைப்பார்க்கலுற்றாள்
பதினறுநாளாச்சு பார்த்திபன்போனதுவாம்
மூன்றுநாளாறு பொழுதிலேவாருமென்று
மைந்தன்மேலாணையிட்டு மாபாவிபோனானே
ஆணைமறந்தவனும் ஆரைமேலாசைகொண்டான்
எங்கேயுல்லாசமாக யிருக்கிறாரோவாள்விசயன்
அவன்-எமலோகம்போனாலும் இட்டுவந்துசங்கரிப்பேன்
பாதாளம்போனாலும் பார்த்தனைக்கொன்றிடுவேன்
ஆகாயம்போனாலும் அதமபண்ணிப்போட்டிடுவேன்
என்று-சீறியேகண்சிவந்து சிங்கத்தின்குட்டியைப்போல்
கையைச்சடித்து கன்னியருந்தானுமிழ்ந்தாள்
உதிரமுஞ்சதையுமாய் உமிழ்ந்தாளே பூமியிலே
காட்டானைபோலாகத் தேன்மொழியாளல்லியரும்
சிங்கத்தைப்போலாக தேன்மொழியாளல்லியரும்
உருட்டினளிருகண்ணை ஒதுங்குகிறார்ராசாக்கள்
ஆக்கரித்துபற்கடித்து அதட்டியெழுந்தாளே
ஆறுலுங்கூடியே ஆற்றல்வாணக்கோபமுடன்
பாண்டிவளநாடாரும் பஸ்பமாய்ப்பறக்குது
பகல்வத்திபோலாக எறியுதேயிருகண்ணும்
மைந்தனையிடுக்கி வளநாட்டாள்வாறாளே
அறுபதுபேரெழுந்து அந்நேரமோடிவந்து
அம்மா-எந்தநாடென்று அறிவாயிளங்கொடியும்
எங்கேயிருந்தாலு மிட்டுவாரோமர்ச்சுனனை
இங்கேயிருமம்மா இராசகுலநாயகமே
என்றதுகேட்டுமவ ளேதுசொல்வ ளல்லியரும்
எனக்கெதிர்சொல்லாதே யென்னாணைஐபாவே
அரண்மனைதிறவுகோல் அண்ணரிடைகைகொடுத்தாள்

அல்லியரசாணி அருச்சுனன்மேல் படையெடுத்தது.

ஆடாமந்திரியே அறிவுள்ளமருபாதி
ஆனைசேனைபரிவாரம் அடங்கலும்பயணமென்றாள்

காலாளுஞ்சேனைகளுங் கடுகேபயணமென்றாள்
தேர்கொண்டுவாருமென்றாள் துரிதமாய்ப்போகவென்று
சொன்னபொழுதிலே துரிதமாய்வந்தார்கள
சித்திரத்தேர்தனைச் சோடித்தாரழகுபெற
ஆறுவண்டி நூறுசட்ட மழகானகுத்துக்கால்
குத்துக்கால்சொப்பனிட்டு கொடுங்கைதிரைவளைத்து
கும்பகலசமுங் குடைகளலங்கரித்து
அம்புருச்சிலையது அலங்காரம்பண்ணினார்கள்
பாராசாரிபுரவியொன்று பஞ்சகல்யாணியொன்று
தேசியெனும்புரவியொன்று சீவரத்தின குதிரையொன்று
நாலுபுரவிகளை நலமாயலங்கரித்து
குதிரைகளைகொண்டுவந்து கொப்பெனவேகட்டினார்கள்
அலங்கரித்தோம்தேரையெ று அடிபணிந்துநின்றார்கள்
பயணம்பயணமென்று பயணபேரிதானடித்தார்
இப்போதுபயணமென்று யியல்பாகதானடந்தார்
கானலுக்குதானெடுத்தா கறுப்புநல்லகூடாரம்
வெய்யலுக்குத்தானெடுத்தா வெள்ளைநல்லகூடாரம்
பனிகளுக்குத்தானெடுத்தார் பச்சைநல்லகூடாரம்
யானையின்மேல்டேராவுங் குதிரையின்மேல்டங்காவும்
கறுப்புநிசான்செகப்புநிசான் கலந்துபிடித்தார்கள்
யானைகளாறுகோடி அசுவங்களேழுகோடி
தேர்களொருகோடி தோணிகள்முக்கோடி
அமாதருஞ்சமாதரும் ஆஸ்தானமகாதரும்
கலிங்கர்தெலுங்கர்களும கன்னடியமராட்டியரும்
ஈழத்துவங்கணரு மிளநாட்டுசோனகரும்
ஒளிவானபாகுகளும் ஒட்டியருஞ்சோனகரும்
சட்டைகழட்டாத சாமார்த்தியரானவரும்
குப்பாயம்வாங்காத குலமன்னரானவரும்
மட்டில்லாசேனைகளும் மன்னர்பயணமானார்
பட்டயமுஞ்சூரிகளும் பாங்கானகவுரிகளும்
பிமிசாபெரியலகு கேரிசமாம்பெரியகத்தி
கூலிசமுஞ்சூலிசமுங் குண்டுதுப்பாக்கிகளும்
சக்கரமும்வேலுங் தடியும்பெருவலக்கை
உண்டைவில்லுஞ்சண்டைவில்லுஞ் சிங்காணிபூச்சிவில்லும்
எண்ணான்குஆயுதமு மெடுத்தரையிற்கட்டினார்கள்
பாளயங்களுள்ளதெல்லாம் பயணங்களாச்சுதம்மா
ஆனையின்மேல்பேரிகை அடிபடுதகுமுகுமென்று
ஒட்டையின்மேல்நகபத்து ஓசைகிளம்புகுது
அண்டங்கிடுகிடென்ன ஆகாசம்நெக்குவிட
பூமிகிடுகிடென்ன பூலோகம்நெக்குவிட

அடங்காதகோபமுட னல்லிமலர்நாகியாள்
அலங்கரித்ததேர்மேலே ஆரணங்கேறினாள்
இலக்கியபிள்ளையுட னேறினாள்தேர்மேலே
மந்திரிபவளசேனை மங்கையவள் தானேறி
தேரைத்திருப்பினாள் துரிதமாயட்சணமே
சுற்றிக்குடைபிடித்தார் சூரியனைத்தான்மறைக்க
பக்கக்குடைபிடித்தார் பகவானைத்தான்மறைக்க
கவிந்துகுடைபிடித்தார் கதிரோனைத்தான்மறைக்க
அடிபடுதாம்பேரிகை அங்காரந்தானதிர
எட்டுத்திசைநடுங்க இளங்கொடியாள் தான்வாறாள்
இரதகஜதுரகமுடன் நாலுவகைசேனைகளும்
மாவணியும்மரவணியும் மற்றுமுள்ளராசபலன்
வந்ததுவெகுசனங்கள் மண்ணும்விண்ணுங்கொள்ளாமல்
செந்தூளெழும்புகுது சூரியனைக்கப்புதங்கே
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புதங்கே
அண்டாண்டந்தானதிர அடித்தார்கள்பேரிகையை
பூமிடுடுடுடென்ன பேரிகைதானடிக்க
டண்டிகவரிடவே காளமின்னந்தானடிக்க
அஷ்டதிக்கெங்கும் அதிரமின்னந்தான்முழங்க
அண்டங்கிடுகிடென்ன அடித்தான்பறையோசை
ஆனைபரிநடக்க அரசமன்னர்தானடக்க
குதிரைபவனிநடக்க குலசேகர்பின்னடக்க
தெருக்கடந்து தெருவீதிதான்கடந்து
அங்காடிவீதிபத்து ஆயிரந்தெருகடந்து
குசவியர்வீதி குலமன்னர்தான்கடந்து
பீங்கான்கடைத்தெருவும் பின்விட்டுமுன்னடந்தார்
வைகைக்கரைகடந்து மதுராபுரிகடந்து
பட்டணத்தைவிட்டு பரிவாய்நடந்தார்கள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அரியவனங்கடந்து
சில்லென்றுபூக்க செடிகள்வனங்கடந்து
புல்லென்றுபூக்க புலியின்வனங்கடந்து
வேங்கையிருக்கும்வனம் வெள்ளளாப்பூத்தவனம்
எட்டடிவேங்கை யிருக்கும்வனங்கடந்து
பத்தடிவேங்கை பருத்தவனங்கடந்து
அறுபதடிவேங்கை படர்ந்தவனங்கடந்து
சிங்கமுலாவுவனம் சிறுபுலிதாந்துவனம்
ஆளியுலாவுவனம் அன்னபட்சிதாங்குவனம்
கெண்டபேரண்டங்கள் இருக்குமவனங்கடந்தார்
பாதிரிமுல்லை பருத்தவனங்கடந்தார்

ஒருநாரைக்கிருநாரை உயர்ந்தகொம்பில்தானிருக்கும்
கருநாரைக்கிரைதேடும் கதலிவனங்கடந்தார்
மயிலோசைகேட்கும் மாந்தோப்புதானடந்தார்
ஈக்கள் நுழையாத இருண்டவனங்கடந்தார்
அண்டாறியாத தண்டவனங்கடந்தார்
வேந்தரறியாத வெளிக்காடுதானடந்தார்
சந்திரர்கள்சூரியர்கள் காணாவனங்கடந்தார்
வெகுதூரம்வருகையில் வேல்பொருதுங்கண்ணாளும்
பவளம்விளைகின்ற பாங்கானகாடுகண்டாள்
தூரத்திற்கண்டவுடன் செல்லனவனேதுசொல்வான்
எங்களையர்போனது இக்காடோ ஆச்சியென்றான்
ஐயாவென்றுசொல்லவே அடித்தாள் சவடையிலே
அடித்தபொழுதிலே யலறிப்புலம்பினிட்டான்
பாவிமைநினைக்கவில்லை பாலகனையானடித்தேன்
என்று-மைந்தனைக்கொஞ்சியல்லோ மடிமேலேவைத்தாளாம்
அப்போ-மதுரைப்பரிசனங்கள் மாகாசேனைதான்கடந்தார்
சேனைபரிமகல் சமர்த்தர்கள்சூழ்ந்துவர
ஐந்துலட்சங்குதிரைகளும் மெல்லியனைச்சூழ்ந்துவர
ஆனைபவுந்துகளு மாரணங்கைசூழ்ந்துவர
சேனைப்பரிசனங்கள் சொல்லமுடியாது
இப்படியாக எச்சரித்துதான்நடக்க
அப்போது-காடுவெறிகிறதும் கல்லுப்பிரட்டுறதும்
ஆனைமேலம்பாரி அசைக்கிறதும்குலுங்குவதும்
குதிரையின்மேல்கூடாரம் கூடஅசைகிறதும்
குதிரைபிரியாமல் கூடநடக்கலுற்றாள்
அப்போது அல்லியரும் ஆரணங்குமேதுரைப்பாள்
ஆனைகளாறுகோடி குதிரைகளேழுகோடி
மதுரைப்படைகளெல்லாம் மன்றுவருந்தகடா
மதுரைவளநாட்டில் மகாராசர்கேட்கலுற்றார்
அப்போ-அம்மாவருகிறது ஆனைப்படைகளெல்லாம்
பாண்டிவளநாட்டாளும் பவளக்காடுபோய்ப்புகுந்தார்
வெய்யல்விடாய்த்துவந்து விழுந்ததுசேனைகளும்
காதையடைக்கிறதும் களைபாய்வருகிறதும்
நாக்கைவரட்டுறதும் நடுநாக்கிழுக்கிறதும்
வாடிமயங்கினார் மயிலனையாள் சேனையெல்லாம்
அந்தச்சமயத்தி லாரணங்குதான்கேட்டு
பாளையமிறங்குமென்றாள் பத்தினியாளல்லியரும்
கூடாரம்போடுமென்று கொப்பெனவேயிறங்குமென்றாள்
பஞ்சவர்ணகூடாரம் பலதிசையும்போட்டார்கள்

அப்போ-சோரம்புராசாக்கள் துரைகளவரெல்லோரும்
பிள்ளைகலியினால் பெண்ணென்றுசொல்லாமல்
பெண்ணென்றுசொல்லாமல் பிள்ளையென்று தான்வளர்த்தார்
அவள்-மீறிநடந்தாளே மெல்லிருதுவானாளே
பிள்ளையென்றும்சொல்லி பேர்மகுடஞ்சூட்டினார்
அந்தமுடிகொண் டாளுகிறாளிராச்சியத்தை
பதினாறுதன்வருஷம் பட்டமரசாண்டாள்
அவளைக்-கொள்ளவருவார்கள் கோடானகோடியுண்டு
அவளை-மாலையிடவந்தவர்கள் மட்டுமிதங்களில்லை
நித்தியகன்னியாகவே இருந்தாளிந்நாள்வரைக்கும்
குருட்டான்குருகுலத்தான் குந்திமகனருச்சுனன்காண்
சந்தனவடிவழகன் தருமராசன்தம்பியவன்
தோழனும்ராசனுமாய்த் தேசத்தில்வந்தவரும்
பவளக்கொடியாளை பத்தினியைமாலையிட்டு
பதினாறுநாளாச்சு பத்தினியைமாலையிட்டு
அந்த-ஆனந்தவாழ்மாரி யவளமுதுள்ளாச்சியத்தை
இராசமுடிதரித்து நலமுடனேயாளுகிறான்
அவ்வார்த்தைதான்கேட்டாளே அல்லிப்பெருமாளும்
சீறிவெறிபறந்து சிங்கக்குட்டிபோலெழுந்து
கொக்கறித்துதானெழுந்தாள் கொல்லுந்துருவிலையப்போல்
ஆராதுதுவினை அழையுங்கள்வேடுவரை
காவலிலேவையுமென்றாள் கட்டழகவேடுவரை
மூன்றுநாளாறு பொழுதிலேவருவேனென்று
மைந்தன்மேலாணையிட்டு வந்தாரேவாள்விசையன்
மாலையிட்டுக்கொண்டு வாழ்ந்திருக்கநாளாச்சே
யமலோகம்போனாலும் யிட்டுவந்துசங்கரிப்பேன்
ஆகாயம்போனாலு மாறாய்ந்துநான்வருவேன்
பாதாளம்போனாலும் பார்த்துமேகொன்றிடுவேன்
எரிபறந்துகண்சிவந்து எழுந்தாளேபத்தினியாள்
அப்போதுமாயவரு மறிந்தாரேயிவ்வண்ணம்
மோசங்கள்வந்து முடிந்துதேயர்ச்சுனற்கு
ஒன்பதவதாரம் ஒக்கப்பிறந்தாரே
பத்தவதாரம் பாங்காய்ப்பிறந்தாரே
அப்படிப்பட்டதொரு அருச்சுனராசாவை
சங்கரிக்கவல்லமோ நினைத்தாளேதையனல்லாள்
அண்டர்கள்வரத்தையெல்லாம் பெற்றவளாரணங்கு
சொக்கர்வலிமையுண்டு சுந்தரியாளல்லிபற்கு
அறிந்துமிருப்போமே அல்லிநல்லாள்தன்சமர்த்தை
ஏமாந்துநாமிருந்தால் விடுக்கும்வருபார்ச்சுனற்கு

ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் அல்லியரசாணியுடைய பாளையங்கள்
எல்லாவற்றையுங் கொல்லும்படியாக கதண்டு
குளவிகளை ஏகவிடுதல்.

என்றுயெழுந்தாரே எம்பெருமாள் மேகவர்ணர்
துவாரகையைவிட்டு ஸ்ரீராமர்வந்துவிட்டார்
மாய்மையாய்வந்துவிட்டார் வையமாய்வகந்தனிலே
கதண்டுகுளவிகளைக் கடுகவரவழைத்தார்
செங்குளவிகருங்குளவி சேரவரவழைத்தார்
அல்லியரும்புத்திரரு மிருவரையுந்தப்பவிட்டு
ஆனைகுதிரைகளை அடங்கவொண்ணு சேனைகளை
அத்தனைபேரையு மல்லவரைக்கொல்லவென்று
என்றதுசொன்னார் எம்பெருமாள் மேகவர்ணர்

கதண்டுகுளவிகள் சேனைகளைக்கொல்வது.

மாயனுரைகேட்டு வருகுது கதண்டுகள்தான்
பாளையத்தில்போய்புகுந்து பகைக்கவேகொல்லுகுது
கண்டகண்டமாகக் கடித்துமேபோகுது
ஈரல்பிடுங்குதே எல்லவரைக்கொன்றிடுதே
குடலைப்பிடுங்குதே குப்பையில்தள்ளுதே
அம்மாடியப்பத்தையென்று அலறிவிழுவாரும்
செத்துமடிந்தாரே சிவலோகம்போனாரே
அல்லியரும்புத்திரரு மவ்விருவர்தப்பிவிட்டார்
மற்றபேரெல்லோரும் மாண்டுமடிந்தார்கள்
கண்டாளேயல்லியரும் கனத்தவிசாரமிட்டு
இதுவென்னபாவமிது ஏதுமறியேனே
அநீதமாகவே அனைவோருமாண்டார்கள்
எல்லோரையுந்தானெழுப்ப இளங்கொடியாள் தானினைத்தாள்
ஆலவாய்சொக்கராண்டவனே வாருமென்றாள்
மதுரைமீனாட்சியம்மன் வாழ்மதுரைசொக்கரே
ஆபத்தைதீர்க்கவே ஆண்டவனே வாருமென்றாள்
தொழுதுவணங்கியே தோத்திரம்பண்ணலுற்றாள்

சொக்கலிங்கரும் மீனாட்சியம்மையும் வருகிறது.

சொக்கநாதரிங்கு திடுக்கென்றுதானெழுந்து
அங்கையற்கண்மீனாட்சி ஆச்சியருந்தானெழுந்து
அல்லவரைத்தானெழுப்ப ஆண்டவருந்தான்வருவார்
மாயனறிந்து வந்துவிட்டார் சொக்கரண்டை
என்னுடையமைத்துனரே எங்குநீர்போறீரோ
புருஷருந்தேவியுமாய் போறதுமென்ன
அல்லியுடபாளையங்கள் அதமாய்க்கிடந்ததுதான்
கதண்டுகொட்டிசெத்தவர்க்கு கன்னிபுலம்புகிறார்

அல்லவரைநானெழுப்ப ஆயரேபோரேனென்றார்
மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுரைப்பார்
இதுவொருகாரியமாய் நீர்போரகாரணமேன்
அடியேனாலாகாதோ நானெழுப்பமாட்டேனோ
என்னாலேயாகாதோ எழுப்பிவிடமாட்டேனோ
மயிர்க்கால்முறியாதே மாதரிடசேனையெல்லாம்
எழுப்பிவிடுகிறேன் ஈஸ்வரரேதப்பாது
அரண்மனைக்குப்போங்களென்று அனுப்பிவிட்டார்மாயவரும்

ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி அருச்சுனரையழைப்பது.

சேரும்புராசாக்கள் சீமையிலேவந்துவிட்டார்
அச்சுதாணங்கரும் அந்தநல்லவேளையிலே
காலையில்தானெழுந்து கால்கைகள்சுத்திபண்ண
பூங்காவனத்திற்குப் போகிறவேளையிலே
மாயன்பெருமாளை கண்டுவணங்கினார்
ஆயன்பெருமாளை அடிபணிந்தவெல்லாரும்
வாள்விசயனெங்கேயென்று மாயவனார்கேட்கலுற்றார்
வம்பரவருச்சுனனெங்கேயென்றார்மாயவரும்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளருகே
சதுரங்கமாடியே இருக்கிறான்தேர்விசயன்
வாள்விசையர்கோமானை வாவழைத்துவாருமென்றார்
அவ்வார்த்தைகேட்டவர் அச்சுதருமோடிவந்தார்
அருச்சுனனுக்கேதவியரும் ஆசாரவாசலிலே
சொக்கட்டாடுகிற வேளையிலேதோழனவன்
கண்காட்டிதானழைத்தான் காண்டீபனருச்சுனரை
சைகையைத்தானறிந்து தேர்விசயன்தானெழுந்து
பூசைபண்ணிவாரேனென்று போய்நடந்தானருச்சுனனும்
அரண்மனைகளேழுகட்டு மந்தப்புரங்கடந்து
தெத்துக்கடந்து தெருவீதியைத்தாண்டி
ஆணழகனருச்சுனரே அரிராமர்வந்தார்காண்
மாயன்பெருமாளும் வரவழைத்துவாருமென்றார்
எங்கேயிருக்கிறார் எம்பெருமான்சொல்லுமென்றார்
பிள்ளையார்கோவிலண்டையிருக்கிறார்வாருமென்றார்

அருச்சுனன் வருவது.

என்றதுகேட்டமரர் யிளவிசையன்தான்பார்த்து
பூங்காவனம்புகுந்து புஷ்பமலர்பரித்து
மல்லிகைமுல்லை மலர்பரித்தோடிவந்து
மாயனிடபாதத்தில் வணங்கியேதெண்டனிட்டு
கொண்டுவந்தபூமலரைக் குபுகுபென்றுதான்சொரிந்தான்
முக்காலடிபணிந்து முடிவணங்கித்தெண்டனிட்டான்
வந்துபணிந்தவனை வாழ்த்தியேத்தமாயவரும்

ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது.

தம்பியருச்சுனரே மன்னவெழுந்திரென்றார்
மூன்றுநாளாறு பொழுதில்லையோரேனென்று
மைந்தன்மேலாணையிட்டு வந்தீரே வாள்விசயா
மற்றுமொருகன்னியரை மணமாலைசூட்டினாய்
மகுடத்துரைச்சியவள் பவளக்கொடிபொல்லாதாள்
வெட்டியெறிவாளோ வீரமணிவாளாலே
கொல்லநினைத்தாளே கொம்பனையாள்மாதுகன்னி
வைகைநதியாள் வந்தாளேபடைகூட்டி
தண்டெடுத்துவந்தாளே தையலிளங்கொடியாள்
படைகோடிகானகத்தில் வந்துதண்டிறங்கியது
ஆயிரங்கூடாரம் அங்குவந்துபோட்டார்கள்
என்னசெய்வீர்வாள்விசயா என்றார்பெருமானும்

அருச்சுனன் சொல்வது.

ஆனைமுகமன்னன் அருச்சுனனுமேதுசொல்வார்
மகிமையக்ஷமாச்சுதே மாமாவேயென்னசெய்வேன்
எங்கேயொளித்து இருப்பேன்காவலமைத்துனரே
நான்-எமலோகம்போவேனோ எழுலகங்கண்டவனே
நான்-பிரமலோகம்போவேனோ பெருமாளேசொல்லுமென்றார்
நீ-சிவலோகம்போனாலும் தேர்விஜயராசாவே
நீ-பிரமலோகம்போனாலும் போய்ப்பிடிப்பாளல்லியரும்
நீ-எமலோகம்போனாலும் இழுத்துவந்துசங்கரிப்பாள்
நீ-ஆகாயம்போனாலும் அம்புக்கிரையிடுவாள்
நீ-பாதாளம்போனாலும் போய்மறிப்பாளல்லியம்மாள்
இனியென்னசெய்வீர்காண் என்றார்பெருமானும்
உன்-பாதாரவிந்தத்திலே பரகதிசேர்ந்திடுவேன்
நான்-செத்துமடிந்திடுவேன் ஸ்ரீராமர்நேறிய
நான்-வல்லபிராணனை கல்லோடுமோதிடுவேன்
வேறேகதியில்லையென்று விழுந்தழுதெண்டனிட்டான்

கிருஷ்ணர் இருவரையும் மாண்டவர்போல்செய்தது.

ஆயன்பெருமாளு மருளாளப்போது
எந்நாளுமுந்தனிட விடியோடாயெந்தனுக்கு
உன்னாலேயென்னபாக்கியம் உண்டுபலன்கண்டேனடா
என்றந்தமாயவரும் இருவரையுந்தானழைத்து
பவளநல்லகாட்டிலே பாரளந்தார்கூட்டிவந்து
அருச்சுனன்தன்னுயிரு மச்சுநன்தன்னுயிரும்
இருவருயிர்வாங்கி எமபெருமாளடக்கிவைத்தார்
கதண்டுகொட்டிசெத்தவர்போல் கரிபமாலுண்டுபண்ணார்
குடலைப்பிடுங்கியே குண்டிடாரித்துவிட்டார்
வயிற்றைக்கிழித்து மணிக்குடலைதொங்கவிட்டார்

குத்திசரித்து குடலெல்லாந்தொங்கவிட்டார்
துண்டந்துண்டமாகத் துணித்தாரிருவரையும்
நாய்நரிகள் தீண்டாத நல்லெரும்புமேயாமே
சக்கரத்தைதானெடுத்து சுவாமியார்காவல்வைத்தார்
பத்திரமாயிருமென்று பாரளந்தாரப்போது

ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி ஓலையெழுதுதல்

மற்றுமொருமரத்தடியில் வந்துபெருமாளும்
சேமக்குருத்தோலை வாரியத்தமாயவரும்
வண்ணக்குருத்தோலை வாரியத்தமாயவரும்
பொன்னின்னெழுத்தாணி பொருந்தவேகைபிடித்து
ஒப்பனமாகவே ஓலையெழுதுகிறார்
சோரம்புராசாக்கள் சென்றெழுதும்பாவனைபோல்
வெற்றிமதயானை வீமனவன்தனக்கு
நகுலசகாதேவ ராசாக்கள்யாவருக்கும்
மந்தாரக்குந்திபற்கு மாயன்பெருமாட்டும்
பாஞ்சாலன்பெற்றெடுத்த பதிவிரதைதுரோபதைக்கும்
ஆறுயிரவ ரையன்மார்பாண்டியற்கும்
மகுடத்துரைச்சிபவள் வாழவரசியவியற்கும்
மேகம்பயின்றெடுத்த மின்னொளிநாயகிக்கும்
நாகங்களீன்றெடுத்த நாககன்னிமங்கையற்கும்
சோரவளநங்கை சுபத்திரைநாயகிக்கும்
ஊருமதயானை உத்தமர்கள் நூற்றுவற்கும்
உறவின்முறையாரும் உள்ளவருந்தானறிய
அக்கத்தார்சுற்றத்தார் அனைவோருந்தானறிய
வெள்ளிக்கிழமையில் விடியவைந்துநாழிகையில்
சோரம்புராசாக்கள் துரைகளிடபட்டணத்தில்
பவளம்வெட்டப்போனிடத்தில் பார்த்திபனருச்சுனனும்
அச்சுதானந்த அன்புள்ளதோழனுமே
கதண்டுகொட்டிமாண்டார்கள் கட்டழகரென்றுசொல்லி
சாவோலைதானெழுதி தலைப்புரத்தில்சுட்டாராம்

ஸ்ரீகிருஷ்ணர் வெட்டியானைப் ஓலைகொண்டுபோதல்.

அப்போது ஆயன்பெருமாளும் அருளாளரேதுசெய்தார்
வெட்டியானைப்போலாக வேடங்கொண்டாரெம்பெருமாள்
கம்பளியைப்போர்த்து கையிலதடியெடுத்து
தோட்டியைப்போலாகச் சாம்வாலைகைப்பிடித்து
ஓட்டம்பெருநடையா யோடிவந்தாரெம்பெருமாள்
அல்லிநல்லாள்தானிருக்கும் அவ்வழியேவாறாராம்
கண்டாளேமேதோட்டிதன்னை கட்டழகியல்லியரும்
மனிதருமில்லாதே மயங்குகின்றவேளையிலே
தோட்டியைக்கண்டவரும் துரைச்சியவளேதுரைப்பாள்

அண்ணுபடாதோட்டியென்று அழைத்தாளேயல்லியரும்
ஏனம்மாவெனையழைத்தீர் என்றவனும்தெண்டனிட்டான்
எவ்வூருதோட்டிநீ எனக்கறியச்சொல்லுமென்றாள்
சேரும்புராசாக்கள் சீமையின்தோட்டியென்றான்
எந்தவூர்பூமிக்கு ஓலைகொண்டுபோறீர்காண்
குருநாட்டுசீமைக்கு போறேனம்மாகொப்பனையே
குருகுலவம்மிசத்தில் குந்திமகனருச்சுனனை
தருமரிடதம்பியராம் தனஞ்செயனருச்சுனனை
வெற்றிமதயானை வீமருக்குத்தம்பியராம்
சேராம்புராசாக்கள் துரைகளவர்பெண்ணை
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளை
பதினாறுநாளாச்சு பத்தினியைமாலையிட்டு
கதண்டுகோட்டியாண்டுவிட்டான் காண்டீபனருச்சுனனும்
ஆகையினாலே அனுப்பினாரென்னையம்மா
ஓலைகொண்டுபோகிறேன்காண் உத்தமியேயென்றான்சீ
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லிவயிறெரிந்து
ஓலையைத்தாரும் உத்தமனேபார்ப்போமென்றாள்
ஏந்திழையாள்றமன்னெடுத்து ஈந்தான்மடக்கோலை
மடக்கோலைதானெடுத்து வாசித்துப்பார்த்தாளே
அதிலிருந்தமார்க்கமெல்லாம் அறிந்துபுலம்பலுற்றாள்
விரித்தாள்தலைகூந்தல் விட்டெறிந்தாளம்பலத்தில்
அப்பிகொண்டாளடிவயிற்றில் அறைந்துகொண்டாள்திருமுகத்தில்
மோட்டையிடி ஏற்போல் குத்திக்கொண்டாள்தன்வயற்றில்
பிச்சிகொண்டாள்மார்சதைபை பிடித்துக்கொண்டாள்தலைமயினை
நோவென்றசத்தமுடன் குமரிப்புலம்பலுற்றாள்
ஐயையோதெய்வமே அனியாயம்பண்ணீரே
அங்கேயோவானம் இடிக்கதுஎன்றிருந்தேன்
தப்பாதேவானம் தலையிலிடிக்கதுவே
தன்னெடுத்துவந்தேனே சண்டையிட்டுப்போராட
உயிரோடிருந்தால் உற்றசண்டைபண்ணவேணும்
படிந்தவர்தன்னுடனே வார்த்தைகளேனெந்தனுக்கு
என்-பத்தாவைபரிகொடுத்து பாசினில்நிற்பேனோ
புழுவனைத்தாணிழந்து பூமியிலேநிற்பேனோ
கூடமடிந்திடுவேன் குவலயத்தினில்லாது
மாண்டுமடிந்திடுவேன் வையகந்தனில்லாது
தீப்பாய்ந்துபோவேனென்று சொல்லியழுதாளே
உடன்கட்டையேறுவேனென்று உருகியழுதாளே
அண்ணேவேதோட்டிபடா அழகுமைந்தன்தாரேனடா
மைந்தன்புலந்திரனை மேந்திமன்னவனை
கொண்டுபோயென்மாமியிடம் குருநாட்டில்சேருமென்றாள்

குருநாடுதேசத்தில் கொற்றவனும்போய்புகுந்து
அன்புடையதருமரவர் அரண்மனைக்குமுன்னேவந்து
கொற்றவனார்தருமரவர் கொலுவுக்குமுன்னேவந்து
கைகட்டிநின்றவனுங் கடுகெனவே தெண்டனிட்டான்
தயவாகத்தோட்டிமுகம் தருமருந்தான்பார்த்து
யாருடைதோட்டிநீ யென்றுரேவாணமுகர்
நான்-சேராம்புராசாக்கள்தேசத்துதோட்டியென்றான்
இங்கேநீவந்ததென்ன எனக்கறியக்கூறுமென்றார்
சொன்னவுடனேயவன் சுருளோலைகைகொடுத்தான்

தருமர்முதலிய யாவரும்புலம்பல்

மடக்கோலைகட்டவிழ்த்து வாசித்துப்பார்த்தவரும்
அதிலிருக்குஞ்செய்தியெல்லாம் அறிந்தாரே தர்மலிங்கம்
வாய்மூடிதருமரவர் வயிறெரிந்துபுலம்பலுற்றார்
மாலனேவாதம்பியரே உன்னையனுப்பினைத்தேன்
செல்வத்திருமுகமே தேர்விசயனருச்சுனரே
என்கட்டிக்கரும்பேநீ கருவிளமேயெங்கொளித்தாய்
தேடக்கிடையாத திரவியமேயெங்கொளித்தாய்
சுவரிலெழுதவொண்ணாச் சித்திரமேயெங்கொளித்தாய்
பட்டத்திலெழுதவொண்ணா பார்த்தீபாவெங்கொளித்தாய்
உன்னைப்பிரிந்துநான் யிருப்பேனோபூமியிலே
நானெப்படிமனந்துணிந்து இருப்பேனோவான்விசையா
என்றதுசொல்லியே யேங்கியழுகலுற்றார்
வெற்றிமதயானை !வீமசேனன்கேட்டு
விம்மியழுதானே விழுந்துபுரண்டழுதான்
கூவியழுதானே கொற்றவனுமப்போது
நகுலனைதுகேட்டு நலமுடனேயோடிவந்து
மடிந்தீரோவண்ணாவென்று மண்ணில்புரண்டழுதான்
செத்துமடிந்தீரோ சிவலோகம்போனீரோ
மாண்டுமடிந்தீரோ வைகுந்தம்போனீரோ
உன்னையும்விட்டுநான் இருப்பேனோபூமியிலே
என்று-தரையிற்புரண்டழுதான் தாக்குடையநகுலனவன்
சாஸ்திரக்கொடியுடைய சகாதேவன்தான்கேட்டு
அண்ணாவேயென்று அழுதுபுலம்பலுற்றார்
குந்தியம்மாள்தான்கேட்டு குஞ்சரமேயென்றழுதாள்
ஐயோமகனேயென்று அழுதுபுலம்பலுற்றாள்
பாஞ்சாலன்தன்மகளும் பத்தினிபாள்துரோபதையும்
மாரிழவுகொண்டு மயிரைவிரித்துக்கொண்டு
ஏங்கியழுதாளே இடைதாவடம்புரள
அன்னகரிலுள்ளோர் அனைவோருந்தானழுதார்
வர்த்தகரும்தானியரும் வந்துதுக்கங்கொண்டார்கள்

திக்கெட்டுஞ்சீட்டெழுதித் தேசமெங்கும்நாட்டெழுதி
மாரிழவுகொண்டார்கள் மகாசேனையுள்ளவரும்
அங்கவர்கள் துக்கம் அழுதுவந்துகண்டார்கள்
எல்லோருங்கூடியே இறைந்தழுதுகூச்சலிட்டார்
கட்டியழுதார்கள் கடலிரையும்வெள்ளம்போல்
எல்லையளந்த எம்பெருமாள்தான்பார்த்து
குஞ்சிரிப்புகொண்டு குலுங்கமிகநகைத்து
நீங்கள்நடவுங்கள் என்றுரைநீலவர்ணர்

தருமர்முதலியயாவரும் பவளக்காட்டிற்குவருவது

அப்போதுதருமலிங்கம் அவசரமாய்த்தானெழுந்தார்.

தம்பிமார்மூவரும் தானும்நடக்கலுற்றார்
குந்தியம்மாள்தானும் கூடநடக்கலுற்றார்
பத்தினியாள்துரோபதையும் மற்றுமுள்ளவேதியரும்
சங்கவதியம்மாள் தானும்நடக்கலுற்றார்
பல்லக்கின்மேலேறி நடந்தார்பலபேரும்
வேங்கைபடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
சோமருபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
சிங்கமுலாவுவனஞ் சிறுபுலிகள்தூங்கும்வனம்
யாளிகள்வாழுமந்த அவ்வனத்தைதான்கடந்தார்
மயிலோசைகேட்குமந்த மாந்தோப்புதான்கடந்தார்
அண்டாறியாத தண்டவனங்கடந்தார்
வேந்தறியாத வெளிக்காடுதான்கடந்தார்
சந்திரசூரியர்கள் காணுவனங்கடந்தார்
அல்லியம்மாள்தானிருக்கு மவ்வனத்தில்தான்வந்தார்

தருமர் புலந்திரனையழைப்பது.

தாரார்புகழுடைய தருமர்பெருமானும்
கண்டாரேயந்நேரம் கண்மணிபுலந்திரனை
அப்பாபுலந்திரனே அழகுள்ளகண்மணியே
தேனேபசுங்கிளியே தெவிட்டாததெள்ளமுதே
கண்ணேநவமணியே கற்கண்டேசற்கரையே
சொக்கநாதர்கோவிலுக்குத் தூண்டாமணிவிளக்கே
என்தம்பிபுலந்திரனே தனிவிசயன்புத்திரனே
வைகைக்கரைதனக்கு மண்சுமந்தசொக்கரே
ஆயிரம்பாண்டியற்கு அழகானபேரனையா
வாராய்மகனேயென்று வாரியெடுத்தணைப்பார்
தம்பிநீவாடாவென்று தருமரெடுத்துரைப்பார்
போரஞ்சாமன்னன் புலந்திரனுந்தான்பார்த்து
பெரியப்பாவென்று பிரியமுடன்தெண்டனிட்டான்
அன்னையேயென்று அடிபணிந்துதெண்டனிட்டான்
வந்துபணிந்தவனை வாரியெடுத்தணைத்து

வாழ்த்தியெடுத்தி மகனைமடியில்வைத்து
கட்டியணைத்து கனிவாயைமுத்தமிட்டு
மைந்தன்புலந்திரனை மன்னவனுந்தான்பார்த்து
என்-தங்கக்களஞ்சியமே தார்வேந்தர்பூஷணமே

புலந்திரன் சொல்வது.

போரஞ்சாமன்னன் புலந்திரனுங்கூறுவான்
ஐயாவேநீர்கேளும் அடைவாகச்சொல்லுகிறேன்
எங்கள்-பாண்டிவளநாட்டிலே பவளத்தேர்கேட்டேனப்பா
பாண்டிவளநாட்டில் பவளங்கிடையாது
எனக்குதோஷித்ததென்று எழுதி ஓலைவிட்டாள்
கலைதாங்கிபோச்சுதென்று கன்னியெழுதிவிட்டாள்
அப்போதுஐவரும் அவரின்சேவந்தரையா
ஐவரைநானும் பவளத்தேர்கேட்டேனையா
எடுத்துமடியில்வைத்து என்கண்ணேநல்லதென்றார்
எப்போவருவீரென்று யான்கேட்டேனையாவே
மூன்றுநாளாறுபொழுதிலேவாரேனென்று
என்பேரிலாணையிட்டு எழுந்தருளிப்போனாரையா
சேராம்புகானகத்தில் செத்துமடிந்தாரையா
பவளத்தேர்கேட்டுநான் பழிகாரனானேனையா
சும்மாவிருந்தேனானால் சுகமாயிருப்பாரையா
ஐயாவேயென்று அலறினன்பாலனும்
தாரார்புகழுடைய தருமரவர்கேட்டு
பாலன்புலந்திரனைப் பார்த்துபுலம்பலுற்றார்
அறிவுள்ளஐயாவே ஐயாவேயென்றழுதார்
வெற்றிமதயானை வீமனும்பார்த்தழுதான்
நகுலசகாதேவரென்னும் ராசர்புலம்பலுற்றார்
அங்கவர்களெல்லோரும் அழுதுபுலம்பலுற்றார்
தாரார்புகழுடைய தருமர்பெருமானும்
மதுரையையாளுகின்ற மாதுமுகம்நோக்கி
மைந்தரும்நீருமாய் வந்ததென்னசொல்லுமென்றார்

அல்லியரசாணி சொல்வது.

பிறவாமுடிதரித்த பெண்ணரசிசொல்லலுற்றாள்
உந்தேன்மதிகுலத்தேன் விதியினிடவசத்தால்
முன்னேநடந்த முறையெல்லாஞ்சொல்லலுற்றாள்
போரஞ்சாமன்னன் புலந்திரவீரியனும்
பவளத்தேர்வேணுமென்று பலபேராநான்கேட்டேன்
சேறும்புகானகத்தில் உண்டென்றார்செம்பவளம்
எங்களரசாது எடுத்துவருவதற்கு
அருச்சுனராசாவால் ஆகுமென்றார்எல்லோரும்

மைந்தன்புலந்திரற்கு மாபாவம்வந்ததென்று
ஒல்லையழுதிடவே வுந்தமே அறுபவைத்தேன்
அக்கணமே அருச்சுனனும் ஐவர்க்கேவலதாமையா
பாலன்புலந்திரனும் பவளத்தேர்மேட்டானையா
மூனாறுநாளாறு பொழுதிலேவாறுமென்று
மைந்தன்மேலாணையிட்டு மனைவரப்போனாரே காண்
பதினாறுநாளாயும் பார்த்தான்வரவில்லையென்றான்
யாரோவுயிர்த்திடுங்கள் பண்ணுகிறாள் என்றுசொல்லி
தண்டுதளமெடுத்து வந்தேனே தனஞ்சயனே
மதுரைபடைத்தலைவர் மகாராசாத்தனையும்
யானைகுதிரைகளும் அண்டவொண்ணாச்சேனைகளும்
கதண்டுகளைவிவந்து கொட்டிமடிந்தது
மைந்தனும்நானும் மரம்போல்நின்றுவிட்டோம்
என்று-தருமராதுபாதத்தில் தானவிழுந்துதெண்டனிட்டு
என்னசெய்வேனென்று ஏங்கிமிகவழுதாள்
மைந்தன்புலந்திரனை வைத்துவளர்த்திடுங்கள்
எடுத்துவளர்த்திடுங்கள் என்றந்தஅல்லியம்மாள்
தீப்பாய்ந்துபோவேனென்று சொல்லிப்புலம்பலுற்றாள்
பாருள்ளதருமலிங்கம் பார்த்துமிகவழுதார்
மோதிரக்கையை முகத்தோடணைத்துக்கொண்டு
மெத்தப்புலம்புகிறார் வேந்தர்தருமலிங்கம்

கிருஷ்ணன் அர்ச்சுனன் இறந்துவிட்டதைக் காட்டுதல்.

எல்லையதிந்தொரு எம்பெருமான்தான்பார்த்து
ஏன்காணழுகிறீர்கள் இப்பெரியகானகத்தில்
மன்னவரருச்சுனனார் மாண்டவிடங்காட்டுகிறேன்
என்றுசொல்லிமாயவரும் எல்லோரையுமழைத்துவந்து
வாள்விசையன்பிணத்தை வகையாகக்காட்டலுற்றார்

தருமர் முதலிய யாவரும் புலம்பல்.

தக்கபுகழுடைய தருமர்பெருமானும்
விசையர்திருமுடியை வேந்தர்வரவழைத்து
காண்டீபன்தன்முடியைக் கண்மலரிலொற்றிக்கொண்டு
தம்பியடாவென்று தருமர்மிகவழுதார்
வீமரவர்பார்த்து மிகவும்புரண்டழுதார்
நகுலசகாதேவ ராசர்புலம்பலுற்றார்
அண்ணாவேயென்று அழுதுபுலம்பலுற்றார்
மந்தாரக்குந்தியம்மாள் மாதுபுலம்பலுற்றாள்
சங்கோதியம்மாள் பார்த்துப்புலம்பலுற்றாள்
பாஞ்சாலன்பெற்றெடுத்த பத்தினிதுரோபதையும்
என்னை-மாலையிட்டமன்னவனே மடிந்தீரோகானகத்தில்

என்றந்தத்ரோபதையும் ஏங்கியழுகலுற்றாள்
மதுரைத்துறைச்சி மாதுநல்லாளல்லியரும்
காண்டீபனருச்சுனனைக் கண்டுமனங்கொதித்து
பார்த்துமேமாரடித்துப் பைங்கிளியுந்தானழுதாள்
கூடமடிவேனையா கொற்றவனேயென்றுசொல்லி
மெத்தப்புலம்புகிறாள் மெல்லிநல்லாளல்லியரும்
அச்சுதன் தங்கை ஆரணங்குசுபத்திரையும்
என்-கண்ணான மைத்துனரே காண்டீபனருச்சுனரே
உம்மைவிட்டுநான்பிரிந்து இருப்பேனோபூமியிலே
மாண்டுயிருக்கிறது மன்னவனேநீதியுண்டோ
இனியிந்தசிவனை இழக்கிறேனென்றழுதாள்
கோவென்றழுதாள் கோபாலன் தங்கையவள்
தேவிமாரெல்லோருந் தாந்தரமாய்தானழுதார்
போராஞ்சாமன்னன் புலந்திருமப்போது
அந்த-பாருருந்தருமரைப் பார்த்தந்தபாலகனும
ஐவருடன்கூட ஐயாவேவநான்மடிவேன்
நான்கூடமடிவேனென்று குழந்தையழுகிறானும்
பாலனழுகிற பரிதாபந்தான்பார்த்து
மைந்தன்புலந்திரனை மன்னவருந்தான்பார்த்து
அறியாதபாலகனே அறிவுள்ளவப்பாவே
இந்தத்துயரமும் வருவானேனுந்தனுக்கு
இது- மாயர்மருத்துவமோ மன்னவனேநாமறியோம்
என்றுமைந்தனைத்தானினைந்து மன்னவருந்தானழுதார்
வெற்றிமதயானை வீமனவன்பார்த்தழுதார்
நகுலசகாதேவ ருசாக்கள்தானழுதார்
முத்துமுடிதரித்த முருகுழலாள்புத்திரனை
கட்டியழுதார்கள் கடலுடைந்தவெள்ளம்போல்
கூட்டியழுதார்கள் கொம்பனைமாரெல்லோரும்

சேராம்புராசாக்கள் பவளக்கொடியாளை அருச்சுனராசன்

எங்கேயென்று கேட்குதல்.

சோரம்புராசாக்கள் தெருவிலுலாவுகையில்
வடகோடிகானகத்தில் வருவானேன்கூச்சலென்று
ஐம்பதுபேருமாய் அரண்மனைக்குள்ளேவந்து
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளை
மாப்பிள்ளைருயனும் மன்னவனெங்கேயென்றார்
பூசைபண்ணிவாறேனென்று போனாவர்கானகத்தில்
வடகோடிகானகத்தி லென்னபோகூச்சலென்று
அஞ்சலிமேலதூதுவரை அனுப்பிவைத்தாரப்போது
அப்போதுதூதுவர்கள் அடுத்தார்களவ்வனத்தை



சோரம்புராஜர் வருவது.

மாப்பிள்ளைராயர் வைகுந்தஞ்சேர்ந்தார்காண்
பூசைபலாணியாமேறேனென்று போனாரவர்கானகத்தில்
வடகோடிகானகத்தி லென்னமோகூச்சமென்று
அஞ்சலிலேதூதுவரை அனுப்பிவைத்தாரப்போது
அப்போதுதூதுவர்கள் அடுக்கார்களவ்வனத்தை
மாப்பிள்ளைராயர் வைகுந்தஞ்சேர்ந்தார்காண்
ஓடிவந்தார்தூதுவர்கள் ஒருநொடிக்குள்ளாக
தூதுவரும்வந்து தொழுதுமேதெண்டனிட்டு
மாப்பிள்ளைராயர் வை ந்தஞ்சேர்ந்தார்காண்
அவர்களுடசேனைகளும் அனைவோரும்வந்திரங்கி
கட்டியழுகிறார் கானகங்கொள்ளவில்லை

சேராம்புராசாக்கள் வருவது.

ஐம்பதுபேர்ராசாக்கள் அபாயமெனவென்று
அவனை-மன்னரிபேன்மன்னரிபேன் மூம்மூர்த்தியானவரை
அனியாயமென்றுசொல்லி அருந்சிறையாவதென்ன
ஐம்பதுபேர்ராஜாக்கள் அவர்களிடகேவியாரும்
எல்லாருங்கூடியே ஏகலுற்றார்கானகத்தில்
கானகத்தில்வந்து கதும்பிமிகவழுதார்

பவளக்கொடியாள் புலம்பல்.

கட்டியழுதார்கள் கடலுடைந்தவெள்ளம்போல்
அப்போ-பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
பதினெட்டுவருஷம் பாவிசிறையிருந்தேன்
இந்தப்பழிமொழியாய் ஈஸ்வரரேயிங்குவந்து
என்னை-மாலையிடச்சொல்லி மாக்கமல்லோபண்ணீரே
அப்படியேமாலையிட்டேன் அருச்சுனரைநானுமிப்போ
அண்டமலைகளந்த ஆயர்பெருமானே
நீ-என்கணநாள்காத்திருந்தீர் என்னைச்சிறையில்வைக்க
எத்தனைபேர்ராசாக்கள் வந்தார்கள்மாலையிட
நான்-யாருக்குமாலையிடேனென்றிருந்தேனிப்போது
அருச்சுனரைமாலையிட்டு அருஞ்சிறையானேனே
ஐயைபோதெய்வமென்று அலைபாழுகிறாள்
அப்போதுஎம்பெருமாள் ஆயரவர்பார்த்து
மதுரைதுரையல்லியரின் மனதைக்கலக்கிவிட்டார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தாயகியும்
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளை
உற்றுற்றுப்பார்த்து உளமுமிகக்கலங்கி
வாலைப்பிராயம் வாராதுபதினாறிருக்கும்
வேரிற்பவளம் மின்னுகிறகாந்தியைப்போல்

கோடிசூரியப்பிரகாசம் போலேயிருக்கிறார்
இவைகளெல்லாந்தானறிந்தாள் இளங்கொடியாளல்லியரும்
வாள்விசயன்தோள்மேலே மாலையிட்டாளுத்தமியும்
நான்கண்டகாட்சியெல்லாங் கண்டோமிதுநெடுநாள்
பதினாறுநாளையிலே பாவிசிறைவைத்தார்காண்
என்றுசொல்லியல்லியரும் யேங்கியழுதாளே
தோரவடிவழகி துரோபதையுந்தான்கேட்டு
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளை
கட்டியழுதார்கள் கமலப்பூநாயகியை
அப்போது-ஐம்பதுபேர்ராசர்களு மவர்களுந்தானழவே
ஆருயிரவர் அணிதிரளாம்பாண்டியர்கள்
எல்லோருங்கூடியே யிசைந்தழுதுகூச்சலிட்டார்
அங்கவர்கள் துக்க மடங்கினபிற்பாடு
தக்கபுகழுடைய தருமரவரேதுசொல்வார்
இறந்ததோராருச்சுனனு மினிதிரும்பப்போறதில்லை
மாண்டதோராருச்சுனனும் மறுபடியும்வாறதில்லை
என்தம்பியைதானெடுத்து தகனங்கள்செய்யவேணும்
ஆராரைக்கூட்டி அனுப்புவதுசொல்லுமென்றார்
அப்போது அல்லியரும் அரசர்க்கெடுத்துரைப்பாள்
ஆதினகர்த்தாவே ஐயாவேநான்பாவி
ஐவருக்குப்பொதுவல்லோ ஆரணங்குதுரோபதையும்
மேகத்தில்வந்துதித்த மின்னொளிநாயகியாள்
பார்ப்பான்மகளான பரிபுடையபோகவதி
நாகம்பயின்றெடுத்த நாககன்னிநாயகியும்
அச்சுதன்தங்கை ஆரணங்குசுபத்திரையும்
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
அன்னநடைமாதர்களை அக்கினியில்தள்ளுமென்றார்
அப்போஐம்பதுபேருமாய் அனைவோருமோடிவந்து
தாரார்புகழுடைய தருமரடிவணங்கி
எங்கள்-ஐம்பதுபேராசருக்கும் ஆண்டிருக்கபிள்ளையில்லை
நாங்கள்-ஐம்பதுராசர்களும் அருந்தபசுபண்ணுகையில்
எங்கள்யாவருக்கும்பிள்ளையில்லை என்றுசொல்வானோர்
பவளக்கொடிமேலே யுண்டுபண்ணார்பாலகியை
பிள்ளைகலியினால் பெண்ணென்றுபாராமல்
பெண்ணென்றுசொல்லாமல் பிள்ளையென்றுநான்வளர்த்தேன்

பிள்ளையென்றுசொல்லி பெண்மருடஞ்சூட்டினேம்
வண்ணலட்சங்கோடியுங் மாலையிடவந்தவர்கள்
மற்றொருவர்கையில் மணமாலைதீண்டேனென்று
நித்தியகன்னியாகவே இராச்சியத்தையாண்டிருந்தாள்
பதினாறுநாளாச்சு பாவிவந்துமாலையிட்டு
அப்படிப்பட்ட அரசரையனுப்பிவிட்டு
தியங்கியிருப்போமோ திருமகளைத்தானிழந்து
எங்களைக்கூடவே யிளவரசேகளுமென்று
ஐம்பதுபோராசர்களும் அவர் தம்போய்ப்பணிந்தார்
தாரார்புகழுடைய தருமரவர்பார்த்துமல்லோ
பாராளுந்தருமரந்தப் பரிதாபம்பார்த்துமல்லோ
மோதிரக்கையை முகத்தோடறைந்துக்கொண்டு
மகாராசர்தருமரவர் வயிறெறிந்துமனங்கலங்கி
என்னசெய்வேன்வாள்விசயா என்றுமிவழுதார்
அந்நேரவேளையிலே அரிராமரேதுசொல்வார்

ஸ்ரீகிருஷ்ணர் வைத்தியனாய்வருவது.

பாராளுந்தருமரிட பரிதாபம்பார்த்துமல்லோ
ஏழுமலையளந்த எம்பெருமாளப்போது
எழுப்பிவிடவேணுமென்று யெம்பெருமாள்தானெழுந்து
மாயன்பெருமாளும் மனமகிழ்ந்துவாராரர்காண்
மந்தமடிப்புகளும் மாணிக்கத்தொப்பைகளும்
பொன்னூல்மிதியடியாம் பொந்திக்கோல்கைபிடித்து
வைத்தியன்போலாக மருந்துபையைதோளில்வைத்து
ஆரடாமன்னவனே யாரவர்காணகத்தில்
எவர்காணுமிங்கே இறைச்சலென்னகாணகத்தில்
அப்போதருமர் அரசாளும்ராசதுரை
நாங்கள்-குருநாடுசீமை கூச்சல்வந்ததென்றுசொன்னார்
தர்மரென்றுசொல்லுவார் நீர்தானேதாம்வேந்தா
ஆமையாநான்தான் அவதிப்படுகிறேன்
மாண்டதொருமன்னன் மன்னவனேயார்காணும்

வைத்தியர்க்கு தர்மர்சொல்லியது.

என்னேடேதான்பிறந்த எழில்விசயனார்க்கனர்காண்
மாண்டதொருமன்னர்க்கிந்த மாதரொல்லைமசரிசையென்றார்
தாயாருங்குந்தியம்மாள் தங்கையவள்சங்கோதி
இவ்விருவர்தான்தவிர இயலானஐயாவே

பாலுடன்தேனும் பசுவினெய்வேணுமென்றார்
அப்படியேகொண்டுவந்து கொடுத்தார்களப்போது

வைத்தியர் சொல்வது.

ஓமம்வளர்த்தி உலகளந்தமாயவரும்
காயம்பட்டமேனியெல்லாங் கையாலேதான் தடவி
மற்றுமொருநினைவாய் மாயவருமேதுசொல்வார்
பெண்டுகளைப்பார்த்தாற் பொறுக்கமுடியாது
வசைபண்ணும்பெண்டுகளை உறுதிபண்ணித்தாருமென்றார்
அப்படியேநல்லதென்று அரசராகததாமதுரை
கால்வேறுகைவேறாய் கடுக்கிடைத்திலைத்து
எமலோகம்போனவுயி ரிட்டுவந்தேனிப்போது
வந்ததொருசீவன் வைகுந்தம்போகுதுகாண்
எடுத்தடக்கிக்கொள்ளுமென்றலலோஎம்பெருமாள்
எழுந்துநடந்தாரே எம்பெருமாள்மேகவர்ணர்
அப்போதுதர்மரவர் அவர்பின்னேதானடந்தார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்பின்னோடே
முன்னோடிவந்தவுடன் பெருமாளுநின்றல்லோ
செந்தாமறைபுட்பம் தேவிதன்னைநோக்கி
வாள்விஜயனருச்சுனனை வதையொன்றும்பண்ணேனென்று
நிச்சயமாய்சொன்னால் நிசமாயெழுப்பிடுவேன்
என்றுரைக்கமாயவரு மேந்திழையுஞ்சொல்லுவாள்
எங்கள்-ஆருயிரவர் ஐயமார்தம்மாணை
அங்கயற்கண்ணம்மை அவருடையசீர்பாதம்
என்சீவனுள்ளகாலமெல்லாம் தீண்டேனருச்சுனரை
என்றுசொல்லமாது எம்பெருமாள்சம்மதித்து
சோரவளநங்கை சுபத்திரையைத்தான்பார்த்து
நீஎன்னசொல்லுமென்றார் நிகரில்லாமாயவரும்
எங்களண்ணனுடசீர்பாதம அவரைநான்தீண்டவில்லை
அலைமோதுபாற்கடலில பள்ளிகொள்ளுமச்சுதர்காண்
நீஇட்டதோராணை எனக்குமிகப்பாரமல்லோ
சூடாமணிக்கடகத்தில் இருக்கின்றநூகமது
அதை-விட்டுவிட்டாயானல் விசையனெழுந்திருப்பார்
மாட்டேனென்றுசொல்லி மறுத்தாள்சுபத்திரையும்
ஆணைமறந்தாளே ஆரணங்குசுபத்திரையும்
அப்போ-பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு
கோபத்தனலாகி கொம்பனையாளப்போது
விடுகிறையோயில்லையோ வேல்பொருதுங்கண்ணாளே
உன்னொருத்திக்குமன்னர் உயிரிழந்துபோனக்கால்
நாங்களத்தண்டபேரு மருஞ்சிறையாவோமடி

என்றுசொல்லியருச்சுன ராசனைதானெழுப்ப
பூதத்தைவிட்டாள் பொற்கொடியாள்சுபத்திரையும்

வைத்தியனாகியகிருஷ்ணர் அர்ச்சுனனையெழுப்புதல்.

அப்போதுஎம்பெருமா னம்பிக்குளிர்ந்து
அர்ச்சுனராசனை சுற்றிவந்துமாயவரும்
தட்டியெழுப்பினார் தனஞ்செயருச்சுனரை
அண்ணரிடபாதம் அடிவணங்கிதெண்டனிட்டான்
வாரியெடுத்து மாபோடேதாவணைத்து
நீர்-வைகுண்டம்போனீரோ வாள்விசயனருச்சுனரே
ஆகாயம்போனீரோ ஆணழகாவருச்சுனரே
என்று-கட்டியணைத்துக் கனிவாயைமுத்தமிட்டு
என்னையாவென்று தருமருஞ்சொல்லிக்கொண்டார்
அப்போதுவாள்விசைய னடிதொழுது தானெழுந்து
குந்தியம்மாள்பாதம் கொற்றவனுந்தெண்டனிட்டான்
கட்டியணைத்துக் கனிவாயைமுத்தமிட்டாள்
வெற்றிமதயானை வீமனவன்பார்த்து
விசையனருச்சுனனை வேல்பொருதுங்கண்ணாவ
அவன்-கட்டியணைத்து கனிவாயைமுத்தமிட்டு
வேல்பொருதுங்கண்ணா விசையாநீஎங்கேபோனாய்
சீனிசருக்கரை செல்வமேயெங்குபோனாய்
என்றுமேவீம னிருந்தானகமகிழ்ந்து
நகுலசாகாதேவர் இராசமுடிமன்னவர்கள்
அண்ணாவேயென்று அருச்சுனரைக்கட்டிகொண்டார்
பொங்கிமனமகிழ்ந்து புகழ்வேந்தர்தாமிருந்தார்
மைந்தன்புலந்திரனு மன்னவனுமப்போது
அர்ச்சுனர்பாத மடிவணங்கிதெண்டனிட்டான்
தெண்டனிட்டமைந்தனை தேர்விசையர்தானெழுந்து

அருச்சுனர் புலந்திரனைக்கேட்பது.

வாழ்த்தியெடுத்து மடியின்மேல்வைத்துக்கொண்டு
முகத்தோடேமுகம்வைத்து முத்தமிட்டுபாலகனை
என் தங்கமுடிபெற்ற தார்வேந்தன்புலந்திரனே
என்வந்தாயிங்கேசென்று யெழில்விசயர்தான்கேட்டார்

புலந்திரன்சொல்வது.

அப்போதுபுலந்திரனும் அருச்சுனர்க்குசொல்லலுற்றான்
குருநாட்டில்தானிருந்து கொற்றவரேநீங்களுந்தான்
மதுரைக்குத்தாங்கள்வந்து மன்னவரேயிப்போது
பவளத்தேர்சொப்பனிட்டு கொண்டுவாரேனென்றுசொல்லி.
மூன்றுநாளாறு பொழுதிலேவாரேனென்று
பதினாறுநாளாச்சு பார்த்தர்வரவில்லையென்று
எங்கள்-மாதுநல்லாளல்லியரும் வந்தாள்படையெடுத்து

அந்த-தாமமுடியாளும் தண்டுதனையெடுத்து
எங்களையர் போனவழி யிதுதானென்று கேட்டேன்
ஐயமென்றுசொல்லவில்லை அடித்தாளையாமெல்லை
அப்படிகோபமாய் வரும்போது அல்லியரும்
சேரம்புகானகத்தில சென்றோமதனைத்தேடி
தண்டுதளங்களெல்லாம் தாபரித்துயாமிருந்தோம்
இப்படியாக இருக்குந்தவேளையிலே
சேராம்புகானகத்தில சேவிக்கும்வேடர்வந்தார்
அந்த-வேடுவரையப்போது வேந்தர்கள்தான்பிடித்து
மாதிருக்கும் மயிலனையாள்கூடாரம்
கொண்டுவந்துவிட்டார்கள் கொற்றவருஞ்வேடுவரை
மதுரைநகராளுமெங்கள் மாதுநல்லாளப்போது
நீங்களார்காணுமென்று அல்லியருங் கேட்கலுற்றாள்
சேராம்புகானகம் சேவிக்கும்வேடரென்றார்
இது-யாருடையசீமையென்று அருங்கிளியாள்கேட்டாளே
பவளக்கொடியாளின் பைங்கிளியாள்சீமையிது
என்றந்தவேடுவரும் எடுத்துரைத்துச்சொன்னார்கள்
அப்போதுமாதுநல்லா ளல்லியருஞ்சொல்லலுற்றாள்
மாதுநல்லகன்னிபற்று மணமாலையாசகுதடா
பதினெழுநாளாச்சு பைங்கொடிமையமாலையிட்டு
ஒக்கவொருவ னுயிர்த்தோழனைகவந்தான்
அவருக்குமணமாலை ஆச்சுது ஆமமானே
என்றதுகேட்டாள் இளங்கொடியும்அல்லியம்மாள்
கதும்பியெழுந்திருந்தாள் காட்டானைப்போலாக
அப்படியாவென்று ஆணைக்குப்போது
கோபந்தனலாக கொம்பனையுந்தானிருந்தாள்
கதண்டுகுளவிகளும் காவலரைத்தானுமப்போ
யானைகுதிரைகளை அடல்பெரியசேனையெல்லாம்
கொட்டிமடித்தது கொற்றவிரலரையும்
மதுரைத்துரைச்சி மைந்தனைத்தப்பவிட்டு
அத்தண்டசேனையெல்லா மங்கேமடிந்தார்கள்
செத்துமடிந்ததை செல்வநிபாள்தான்பார்த்து
ஈஸ்வரியேபார்வதியே என்றுபுலம்பலுற்றாள்
மெத்தவிசாரமாய் மெல்லியருந்தாமிருந்தாள்
சேராம்புராசாவின் தோட்டிஒருவன்தான்
நீ-எங்கேயூர்போகிறீர் என்றாளிளங்கொடியும்
குருநாட்டுசீமைக்குக் கொற்றவாழலைகொண்டு
தருமர்க்குதம்பியராம அவர்பேருச்சுனராம்
சேராம்புகானகத்தில் சென்றுமடிந்தாரங்கே
தருமர்க்குஓலைகொண்டு வாரேனென்றான்சாம்புவனும்
அப்போதுமாது அலரிபிகைவழுதாள்

இதன்மேலிருவென்று ரிளங்கொடியுமப்போது
நாமக்கொடியுடைய நகுலனவன்றனக்கு
சிங்காசனங்களிட்டு விற்றிரென்றாரப்போது
சாஸ்திரக்கொடியுடைய சகாதேவராசருக்கு
பொன்னிழைத்துவைத்த சிங்காதனம்போட்டு
இதன்மேலிருவென்று ரிளங்கொடியாளப்போது
புலந்திரராசனுக்குப் போட்டார்சிங்காதனங்கள்
எடுத்துமவள் வைத்து இருமையாதம்பியரே
என்றுமவள்சொல்லி இளங்கொடியுமப்போது
விசயனார்தேவியற்கு விதவிதமாய்வார்த்தைசொல்லி
அவரவர்க்குத்தக்கதோ ராசனங்கள்போட்டுவைத்தார்
அப்போது-தேவிமாரெல்லோருந் திறமுடனே தானிருந்தார்
பார்த்திபனருச்சுனனும் பள்ளியறையுட்புகுந்து
அப்போது-பாராளுந்தருமதுரை பார்த்துமனமகிழ்ந்து
இந்தமாதுநல்லகன்னியவள் மரியாதையுள்ளவள்காண்
இறப்புக்கும்பிறப்புக்கும் இனியொருபெண்வேணுமோ
என்றுமனங்குளிர்ந்து இருந்தார்சந்தோஷவாக
மதுரைத்துரைச்சியரும் மனம்பொருந்திபல்லியரும்
மாதினுடபட்டணத்தில் மகாசேனையுள்ளதெல்லாம்
அரண்மனையிருபுரமும் ஆஸ்தானமண்டபமும்
பள்ளியறையெங்கும் பார்க்கமுடிபோகவில்லை
அந்தப்-பவளப்புதுமைகளைப் பார்த்தாளே அல்லியரும்
இடம்பெரியவாசலது எழுநூறுகாதவழி
தூணுக்குத்தூணுமங்கே தொண்ணூறுகாதவழி
ஆயிரங்காதவழி அழகானவாசலது
பவளக்கால்சொப்பனிட்டு பாங்காயலங்கரித்து
பொற்றாணும்கற்றாணும் குங்குமநற்றாணும்
தூணுக்குத்தூணுமங்கே தூண்டாவிளக்கெரிய
குளிர்ந்ததங்கத்தூணும் குங்குமநற்றாணும்
தூணுக்குத்தூணுமங்கே தூண்டாவிளக்கெறிய
இட்டிருக்குமாசனமு மேன்மணிச்சிங்காசனமும்
வாடாததாமரையும் வந்துநிழல்காட்ட
முத்துமரகதமும் முழுபவளத்தூணுமங்கே
தங்கத்தால்பொம்மைகளும் தனிவயிரமாலைகளும்
வாழைகமுகளும் வண்ணபலாச்சோலைகளும்
சேரவேநாட்டி செம்பவளத்தூணிருத்தி
நின்றவிடந்தோறும் நிலைதோறும்சப்பரமும்
கண்டவிடந்தோறும் கண்ணாடிமாலைகளும்
காடைவிளக்குகளுங் கைவிளக்குதேர்விளக்கும்
தாமமுடியாளுக்குச் சம்பரநல்விளக்கும்
பவளப்புதுமைதனை பார்க்கமுடியாது

கண்டவிடந்தோறும் கனத்தபவளமலை
பிறவாமுடி தரித்த பெண்பெருமான்நாயகிக்கு
எங்கும்பவளமா யிருக்குதாண்மனைக்குள்
அப்போதுபங்கயஞ்சேர்கண்ணாள் பைங்கிளியாள்கையிலே
அந்தப்-பவளநிறமும் பாரிக்கன்னமுதும்
சோறியமுதுமவள் தாய்மகத்தமுதும்
அவள்-வடிவழகுமொப்பனையும் வையகத்திற்கண்டதில்லை
இந்த-நாதிறாடபசாலை மயிலாளைத்தான்பார்த்து
மதுரைநாகராயல்லியரும் மனமகிழ்ந்தபோது
பவளக்கொடியாளை பைங்கிளியைத்தான்பார்த்து
வாருமிங்கேவாருமென்று வார்த்தைசெப்பியபின்
பாஞ்சாலன்பெற்றெடுத்த பைங்கிளியாள் துரோபதையும்
அலைகடலிற்பள்ளிகொள்ளும் அச்சுதனார் தங்கையரும்
செம்பொனமாசெல்வோரும் கூடிவிளையாடினார்கள்
மாமியார்குந்தியம்மாள் மருமகளைத்தான்பார்த்து
என்-கண்ணான மங்கையரே கட்டழகிவாருமென்று
மாரோடேதானணைத்து மருமகளைமுத்தமிட்டு
என்-அறிவுள்ளநாயகமே அழகுமுடிபொறுத்து
எட்டுகோளங்க்க யிருந்தார்களயாவருமாய்
விருந்துகள்பண்ணியே வெகுமானந்தான்கொடுத்து
பவழத்தாற்பல்லக்கு பாரித்தார்யாவருக்கும்

பவளக்கொடியாள் புலந்திரனுக்குச்சொல்வது.

பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
மைந்தன்புலந்திரனை மடிமேலெடுத்துவைத்து
என்-கண்ணான கண்மணியே காண்டீபன் தன்மகனே
குருநாட்டையாளுகிற கொற்றவர்கள் தன்மகனே
தங்கமுடிபெற்ற தனஞ்சயனார்புத்திரனே
நவரத்தினபொன்முடியே நாயகியாள் தன்மகனே
என்று-கண்ணோடேதானணைத்து கனிவாயைமுத்தமிட்டு
வாரியெடுத்து மடிமீதில்வைத்துக்கொண்டு
மதுரைநாடாளுகிற மாதரசிமகனே
என்று-பவளக்கொடியாளும் பைங்கிளியுமேதுசொல்வாள்
என்-தங்கக்களஞ்சியமே தார்வேந்தர் தம்பிரானே
உந்தனைத்தொட்டு உண்மைபெறலாச்சுதையா
நீ-பவளத்தேர்வேண்டியே பத்தாவைக்கேட்டதினால்
எம்முடன்-பத்தாவுமில்லுவந்து பாலித்தார்காளகத்தில்
நான்-காளகத்திலேவட்டையாடுந்தன்னைவிட்டார்பார்த்தாவர்
அங்கிருந்தநீதாமுனம் அழுதிறதைதான்கேட்டு
என்தாதியரை-போய்வாருமென்று சொன்னேனேஐயாவே

தாதியவள்பார்த்து தார்குழலாளோடிவந்து
ஆரோதெரியாது அரசர்படைவென்றவர்போல்
காணுதுதுஎன்தாயே கடுகெனவேபோகவேணும்
என்றதுசொல்லவே யேறினேன் தண்டிகைமேல்
அப்போதுபோயிரங்கி அவரைநான்பார்த்தேனப்பா
என்-மார்பின்சரப்பளியை வாங்கியேநான்போட்டேன்
தாதியரைக்கட்டுமென்று தண்டிகைமேல்வந்துவிட்டேன்
கட்டியேதாதியரும் கடிகியேயோடிவந்தாள்
அப்போ-மார்பின்சரப்பளியை வாங்கிவரச்சொன்னேனையா
தாதியவள்போய் சரப்பளியைக்கேட்டாக்கால்
தருகிறதில்லையென்றார் தனஞ்சயனுரப்போது
தாதியவள்வந்து தருவதில்லையென்றாளப்பா
அப்போதரண்மனைக்கு வந்துவிட்டேனப்பாநான்
கொலுமுகச்சாவடியில் கொம்பனையுந்தானிருந்தேன்
அன்னவடிவெடுத்து வந்தார்கொலுமுகத்தில்
அவர்-ஆடலும்பாடலும் அதிசயத்தைத்தான்பார்த்து
அவர்-கூவுகிறவோசைகளும் குயிலென்றநானிருந்தேன்
நான்-அன்னமென்றுசொல்லி அணைத்துபிடித்துவந்து
தாதியரைத்தானழைத்து தையலவள்கைகொடுத்தேன்
கூண்டிலடையுமென்று கொற்றவனேசொன்னேனையா
அப்போது-அன்னவுருமாறி அருச்சுனருனரையா
மன்னவனர்ச்சுனனும் மதிலைக்குலைத்தாரே
மணமாலைசூட்டினர் மன்னவனேதம்பியென்றாள்
என்-பத்தாவின்புத்திரனே பார்வேந்தர்தன்மகனே
குருநாட்டையாளுகின்ற கொற்றவனர்தருமதுரை
வெற்றிமதயானை வீமதுரைராசர்
நாமக்கொடியை நகுலனவன்றனையும்
சாஸ்திரக்கொடியுடைய சகாதேவராசரையும்
ஐவரைப்பெற்றெடுத்த அம்மாவேகுந்தியம்மாள்
மதுரைநாடாளுகிற மாதுநல்லாளல்லியரும்
பாஞ்சாலநாயகியாள் பத்தினியாள்தேவியரும்
மாயரவர்தங்கை மங்கைசுபத்திரையும்
விசையனர்தேவி மெல்லியர்கள்யாவரையும்
என்கண்குளிரப்பார்க்க வந்துதேகண்மணியே
இல்லாமற்போனல் யிவர்களையறியேனையா
என்றவள்சொல்ல என்றவருந்தான்கேட்டு
பொங்கிமனங்குளிர்ந்து பொற்கொடிமாரெல்லோரும்

பவளக்கொடியாள் புலந்திரனுக்கு பவளத்தேர்கொடுத்தது.

பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
பவளத்தேரொன்று பாலனுக்குசொப்பனிட்டு

மெத்தவினேதையாய் வெகுவாயலங்கரித்து
மைந்தர்புலநதிரற்கு வேண்டியது தானகொடுத்தாள்
பவளத்தோமேலை பாலனைமேற்றிவந்து
திருஷ்டிசழித்தாளே தேன்மொழியாளப்போது
பங்கயஞ்சீர்கண்ணுள் பவளக்கொடியாளும்
மாமியார்குந்தியம்மாள் மயிலனைக்கப்போது
பாதஞ்சரணமென்று பணிந்தாளே தேன்மொழியும்
மந்தாரக்குந்தியம்மாள் மருமகளைத்தானெடுத்து
வாழ்த்திவிடைகொடுத்து மங்கையருமப்போது
கட்டியணைத்து கனிவாயைமுத்தமிட்டு
என்றுசிரஞ்சீவியாய் என்னாளும்வாழ்ந்திருப்பார்
அப்போது-பங்கயஞ்சீர்கண்ணுள் பவளக்கொடியாளும்
பாராளுந்தருமருக்குப் பாதஞ்சரணமென்றுள்
சாஷ்டாங்கமாகத் தையலருந்தானபணிந்தாள்
வாழ்த்திவிடைகொடுத்தார் வீமதுரைராசாவும்
வெற்றிமதயானை வீமதுரைராசருக்கு
நகுலசகாதேவ நாமமுடிமன்னருக்கு
மைத்துனர்களிருவருக்கும் மாதுசரணமென்றுள்
ஏன்பத்தாவின்தேவிமா செல்லவர்க்குஞ்சரணமென்றுள்
தருமாபுரியாளு தனஞ்சயனாப்போது
பங்கயஞ்சீர்கண்ணுள் பவளக்கொடியாட்கு
வேண்டியவுடுப்புகளும் வேணதுயிலாடைகளும்
பொன்னலலங்கரித்த பொற்பவளதண்டிகையும்
சந்தோஷமாகத் தையலர்க்குத்தானகொடுத்தார்
என்னாளுஞ்சுகமா யிருந்தரசு ஆளுமென்றார்
அப்போவிடைகொடுத்தார் ஐயருமங்கிருந்தார்
பங்கயஞ்சீர்கண்ணுள் பவளக்கொடியாளும்
விசையரந்த அர்ச்சுனரை மெல்லியருந்தான்பார்த்து
குருநாடுசீமைக்கு கொற்றவரேபோமீரா
பதினறுதன்வருடம் பாவிசிறையிருந்தேன்
ஒன்றுமறியாமல் உத்தமியுநானிருந்தேன்
கோடானகோடியுண்டு கொம்பனைமைகேட்டவர்கள்
மாலையிடவந்தவர்கள் மட்டுமிதமில்லையையா
ஆரையுந்தீண்டேனென்று அருஞ்சிறைநானிருந்தேன்
ஏறெடுத்துப்பார்த்தவர்கள் ஏனென்றுகேட்டதில்லை
ஆறுமில்லைவையகத்தில் அர்ச்சுனரேயென்றுசொல்லி
மணமாலையிட்டீரே மாயவர்தன்னருளால
பதினறுநாளையிலே பத்தாவேஎந்தனையும்
செய்தகோலமெல்லாஞ் செய்துவிட்டீரர்ச்சுனரே
குருநாடுசீமைக்கு கொற்றவரேபோமீரா
என்றுசொல்லிகன்னியரு மேன்கிபழுகிறாள்

பொங்கியழுதுமே பொற்கொடியாளப்போது
மயங்கியேதானழுதாள் மயிலினையாளப்போது
அவளைப்-பார்த்தருச்சுனனும் பாரமுடியாளை
மயங்கியழுகிறதை மன்னவனுந்தான்பார்த்து
பொங்கியழுகிறதை போர்விசையன்றானறிந்து
கட்டியணைத்து கனிவாய்முத்தமிட்டு
மாணிக்கத்துப்பட்டியால் மதியிடனைத்துடைத்து
நீஅழுவேனடியகாரியமென அன்னப்பசுங்கிளியே
குருநாட்டுசீமைக்குக் கொற்றவனுந்தமுடனே
நானோடுறவாய் நாயகமேநான்போயி
அங்கேயெல்லோருஞ்சேர்ந்து இருக்குமந்தவேளையிலே
நானும்வருவேன் நாயகமேயென்றுசொல்லி
நான்-தங்குவேனோபூமியிலே தரிப்பேனோ அங்கேநான்
என்சோதிமணிவிளக்கே தெள்ளருமணியாளே
உன்னைப்பிரிந்துநான் யிருப்பேனோபூமியிலே
கடுகிவருகிறேண்டி என்கட்டழகிமயிலே
நானோடிவருவேண்டி ஒருநொடிக்குள்ளாக
காலாறடவாமல் காற்றாய்வருவேண்டி
என்றதுசொல்லவே இளங்கொடிக்கு அர்ச்சுனனும்
பங்கயஞ்சீர்கண்ணன் பவளக்கொடியாளும்
அப்போதுஎதுசொல்வாள் அன்னப்பசுங்கிளியும்
நான்-தங்கியிருப்பேனோ தரிப்பேனோபூமியிலே
நான்என்னசெய்வேன்வாள்விசயா என்றழுதுக்கொண்டிருந்தாள்
இந்தகருத்துக்கோ என்னைவைத்துமாலையிட்டீர்
இப்படியென்றால் இணங்கேனோமன்னவனே
எனக்கென்னகெதியாச்சு யென்றேயழுதுக்கொண்டு
ஈஸ்வரரேபார்வதியே யெனக்கென்னவிதிவிதித்தாய்
அண்டமுலகளந்த ஆயர்பெருமாளே
எல்லோருங்கூடியே யிருந்தீரெங்களுக்கு
இந்தகருமத்துக் கினியென்னசெய்வேனையா
என்றுசொல்லிமாது யிளங்கொடியாள்தானழவே
காண்டீபனர்ச்சுனனும் காளையவனப்போது
பங்கயஞ்சீர்கண்ணன் பவளக்கொடியாளும்
தங்கமுடிதரித்த தனஞ்சயனுபகமே
நான் இங்கேயிருப்பேண்டி யிளங்கொடிநாயகமே
எனக்கும்பெரியவர் இபவானவீமனார்
அவருக்குமூத்தவர் அழகானதருமலிங்கம்
இவர்கள்போகட்டுமென்றுநானிருந்தால் பேச்சுக்கிடமல்லவா
பொறுக்கமுடிகூடாது புத்தியுள்ளநாயகமே
அடிஅதனாலேகண்ணே அவசரம்பொறாதே

போய்வாரேனென்னை யென்றுவிளம்பினன்
அப்போதுமாது பைங்கிளியு மேதுரைப்பாள்
கடுகவருவேனென்று கட்டபூமியெந்தனுக்கு
காலக்குஒருநிச்சயங்கள் செய்துகொடுமென்றாள்
காண்டவபாண்டுருக்கண்ணுருங் காளையவனைத்தொல்லார்
தருமர்மேலாணையிட்டு சுதையவட்குக் கரங்கொடுத்தான்
இனியானுந்தம்புமையோ வலப்பசுங்கிளியே
பங்கயஞ்சீர்கண்ணுள் பவளக்கொடியாளுந
மனதுகுழைந்தாளே மாதுநல்லாள்கைகளியரும்
அர்ச்சுனனுமப்போது அதிகமனப்பூரிக்க
மதுரையில்விடைபெற்று பவளகடக்கனூற்றான்
அங்கேவிடைபெற்று ஐவருந்தானடந்தார
மதுரைதிசைநோக்கி வருகிறார்துரைகளெல்லாம்

## ஸ்ரீகிருஷ்ணமூர்த்திபாணவர் அல்லியுட
## பாளையத்தை யெழுப்பிவிடுதல்.

அண்டமுலகளந்த ஆயர்பெருமாளும்
மதுரைத்துரைச்சி மகாசேனையுள்ளதெல்லாம்
கதண்டுதுளவிகள் கொட்டிப்படிந்தவரை
சேனபரிவாரம் சேனைகளுள்ளதெல்லாம்
யானைகுதிரைகளை அதகண்டசேனையெல்லாம்
தட்டியெழுப்பிவிட்டார் தனஞ்செயனுடெம்பெருமாள்
தூங்கிவிழித்தாற்போல் துரைமார்கள்தாமெழுந்தார்

## தருமர் முதலிய யாவரும் அவர்களிடஞ் செல்லுதல்.

எழுப்பிவிட்டமாயவனு மேகினாப்போது
தருமாபுரியானுந் தருமதுரையெல்லோரும்
குந்தியம்மாள்தன்னுடனே கொற்றவருந்தேவியரும்
எல்லோருங்கூடியே ஏகரித்துத்தானடந்தார்
அல்லிநல்லாள்பாளையத்தில் வந்தார்களப்போது
செத்துமடிந்ததொரு சேனைகளெல்லவரும்
எப்போதும்போல யிருக்கக்கண்டார்கள்
மதுரைத்துரைச்சி மனங்குளிர்ந்தாளப்போது
பாளையங்களுள்ளதெல்லாம் பயணங்களாச்சுதப்பா
ஆனைகுதிரைகளும் ஆள்பெரியசேனைகளும்
சேனாபவுத்துகளுஞ் சேனைகளெல்லவரும
கொடிகள்கொடிச்சீலை குடைகள்சூழ்ந்துவர

யானைகுதிரையின்மேல் அடிபடுதுடங்காவும்
ஒட்டையின்மேல்நகபத்து ஓசைகிளப்புகுது
எக்காளம்சின்னம் எழில்பெறவேவூதுவதும்
பூரிகைடமாரம் பூமியதிருதங்கே
அல்லிப்பெருமாளும் அழகுபுலந்திரனும்
பாஞ்சாலநாயகியாள் பத்தினியாள் துரோபதையும்
மந்தாரக்குந்தியம்மாள் மாமியாருந்தான்கூட
ஆனையம்பாரிமேல் அனைவோருந்தானடந்தார்
பார்க்கமுடிபோகவில்லை பைங்கொடியாள்ராணுவங்கள்
காடுசெடிகள் கடுந்தணலாகுதங்கே
கல்லுகளும்முள்ளுகளும் கடுகிபொடியாகுதங்கே
கருந்தூளுஞ்செந்தூளுங் கதிரோனைக்கப்புதங்கே
பாளையம்போகிற அதிசயத்தைத்தான்பார்த்து
காண்டீபனருச்சுனனும் காளையவன் தானினைந்து
இப்படிக்கு அதிசயமாய் இவள்வரக்காரியமேன்
இனி-நமக்காகவந்து நம்முயிரைக்கொல்லவல்லோ
மாயன்பெருமாளும் மகாதேவர் தருமத்தால்
ஆயன்பெருமாளும் ஆயர்கிருபையினால்
நாம்-தப்பிப்பிழைத்தோம் தார்வேந்தர் தருமத்தால்
பாராளுந்தருமதுரை பாக்கியத்தால்வந்தோம்
இளங்கொடியாள்மாதருக்கு எதிரொருவரில்லையே
தப்பாமல்தலைபறுப்பாள் தாமமுடியாளும்
பொல்லாதஅல்லியவள் போருக்குவல்லவள்காண்
மைந்தன்மேலாணை மறந்தபாவியென்றுசொல்லி
சத்தியனுப்பினார் தார்வேந்தரென்றுசொல்லி
கழுமாத்திலேற்றி கடுஞ்சிறையில்வைப்பாளே
என்றுமனதினுள்ளே எண்ணியேயர்ச்சுனனும்
அப்போஎல்லோருங்கூடியே ஏகரித்துதானடந்தார்
அந்த-மதுராபுரியில் வாழ்வாசிபட்டணத்தில்
போனார்களெவருமாய் பொற்கொடியாளரண்மனைக்கு
அர்ச்சுனனார்தேவிமார் எல்லோரும்போய் நுழைந்தார்
இந்தபாராளுந்தருமருக்கு மற்றுமுள்ளமன்னவர்க்கும்
சிங்காதனங்கள் சோடித்தாளப்போது
குருநாட்டையாள்தருமர் கூடவேதானிருந்தார்
ஐவரையும்பெற்றெடுத்த ஆரணங்குகுந்தியம்மாள்
பாஞ்சாலிநாயகியாள் பத்தினிதுரோபதையுந்

மற்றுமுள்ள தேவியெல்லாம் வாருமென்று தானழைத்தாள்
அவரவர்க்கு ஆசனங்கள் போட்டாளே பல்லியரும்
அப்போமூன்று நாளங்கே முடிமன்னர் தாமிருந்தார்
விருந்தமுது செய்து மெத்தவுபசரித்தாள்
எல்லவர்க்கும் வெவ்வேறாய் ஈந்தான் வெகுமானம்
வெகுமானம் பெற்று விடைபெற்று தானடந்தார்
அப்போது-பாராளுந் தருமதுரை பாலகனைத் தானெடுத்து
கட்டியணைத்து கனிவாயை முத்தமிட்டு
நான்போய்வரேன் கண்ணே பொன்னின் புலந்திரனே
என்றுசொல்லி தருமர் இருமென்றாரப்போது
வெற்றிமதயானை வீமதுரை ராசாவும்
என் அப்பா புலந்திரனே அல்லிமகனே
என்-கட்டிக்கரும்பே காளை புலந்திரனே
போய்வாரேன் கண்ணே புலந்திரராசாவே
என்றுசொல்லி வீமர் இருமென்றாரப்போது
நாமக்கொடியுடைய நகுலரவர் பார்த்து
தம்பிபுலந்திரனே தார்வேந்தர் தம்பியரே
குருநாடு சீமைக்கு கொற்றவனே போய்வாரேன்
என்றவர் சொல்லி இருமென்றாரப்போது
சாஸ்திரக்கொடியுடைய சகாதேவன் தான் பார்த்து
தங்கமணியே தார்வேந்தர் புலந்திரனே
குருநாடு சீமைக்கி கொற்றவனே போய்வாரேன்
என்றவர் சொல்லி இருமென்றாரப்போது
மந்தாரக்குந்தியம்மாள் மயிலனையாளப்போது
புலந்திரனைத் தானெடுத்துப் பெருக்கமனமகிழ்ந்து
ஐவர்கலிதீர்த்த என்னப்பா புலந்திரனே
குருநாட்டையாளுகிற கொற்றவர்கள் தன்னுடனே
நான்போய்வாரேனென்று புலந்திரனை முத்தமிட்டு
இருங்காணும் மன்னவரே என்றுசொன்னாள் குந்தியம்மாள்
அருச்சுனனார் தேவிமார் எல்லோருமப்போது
அப்பா புலந்திரனே அதிரூபசித்திரமே
நாங்கள் யாவரும் போய்வாரோம் என்றார்களப்போது
என்றுசொன்னாரப்போது இயலான தேவிமார்கள்
காண்டீபனருச்சுனனுங் காளையவனப்போது
மைந்தன் புலந்திரனை மன்னவனுந் தான்பார்த்து
போய்வாரேனென்றார் போர்விசயராசாவும்

